

# அருவியூர் நகரத்தார் குரல்

திங்கள் இரண்டுக்கு ஒன்று
கல்வி பண்பாடு வளர்ச்சி இதழ்

ண்டு 25 - 154



பிலவ - ஆடி
ஜூலை 2021

## நானறிந்த உலகமான என் செல்விக்கு

ஐந்தாம் ஆண்டு நினைவு அஞ்சலி

தோற்றம்:
25.10.1972

மறைவு:
16.08.2016

வது

## திருமதி.தி.செல்வி ஆச்சி

நீ என்னை சேர்ந்த செல்வம்
நீ என்னை ஆளும் தெய்வம்
இனிஎன்ன சொல்ல வேண்டும்
ஐந்தாவதாக பிறந்தவளே
உனக்கு ஐந்தாம் ஆண்டு
நினைவு அஞ்சலி மறக்கமுடியுமா?

என்றும் உன் உயிர் **N.திருஞானம்**

திருஞானம் சூப்பர் மளிகைக்கடை & FABRIC WING மொத்தவிலை ஜவுளிக்கடை
நாட்டுக்கல், பொன்னமராவதி.

வெளியீடு
அருவியூர் வடக்கு வளவு நகரத்தார்
**கல்வி வளர்ச்சிக் கழகம் (பதிவு)**

உ
நமது சமூகத்தின் கல்வி வளர்ச்சியே எமது தலையாய குறிக்கோள்

உதவுவோம்! பண்படுத்துவோம்! பாராட்டுவோம்!

பட்டம் பெற்றுத் தொழிலிற் சிறப்போம்!



# அருவியூர் நகரத்தார் குரல்



அலைபேசி : 63744 59670

ஆண்டு 25
குரல் 154

ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப்பு உடைத்து - குறள் 398

ஜூலை - ஆகஸ்ட் 2021
பிலவ - ஆடி



கடிதம், செய்திகள், படைப்புகள் இவற்றை
அனுப்ப வேண்டிய முகவரி :
அருவியூர் நகரத்தார் குரல்,
அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம்,
3, முதல் குறுக்குத் தெரு,
அழகப்பா காம்ப்ளெக்ஸ் பின்புறம்,
பொன்னமராவதி,
புதுக்கோட்டை - 622 407.
avnkalvi@gmail.com
suryaprint1998@gmail.com



## கல்வி வளர்ச்சிக் கழக அறிவிப்பு

கல்வி வளர்ச்சிக் கழகத்திடமிருந்து கல்வி கடன் பெற்றவர்கள் தாங்கள் படிப்பு முடிந்ததும் கடன் தொகையை மாதமாதம் ஒரு சிறு தொகையாவது திருப்பிச் செலுத்துமாறு அன்புடன் கேட்டுக்கொள்கின்றோம்.

### வங்கி கணக்கு விவரம்

**வங்கியின் பெயர்** : இந்தியன் வங்கி புதுப்பட்டி கிளை
**கணக்கு எண்** : 493740102
**IFS C** : IDIB000P052

**- தலைவர், கல்வி வளர்ச்சிக் கழகம்**

# உள்ளடக்கம்

## தலைவர் சிந்தனை




**செ. ஆசை அலங்காரம்** B.Sc.,
தலைவர்
**மக்கள் சேவையே மகேசன் சேவை**



அன்புடையீர்!

நல் வணக்கங்கள்!! நமது சமுதாயம் அறிவு சார்ந்த சமுதாயம். ஒழுக்கத்துடனும், சுயகட்டுப்பாடு நீதி, நேர்மை, தெய்வ வழிபாடு என வாழ்க்கை நெறிகளை பழங்காலந்தொட்டு கடைப்பிடித்து பொலிவோடும், கௌரத்தோடும், வாழ்ந்துவரும் சமுதாயம் நம் சமுதாயம். மன்னனுக்கு ஆலோசனை வழங்கி அரசாட்சியில் பங்குகொண்ட சமுதாயம். மன்னனுக்கு மணிமகுடம் சூட்டுகையில் மணிமகுடத்தை எடுத்துக்கொடுக்கும் அதிகாரமும், உரிமையும் பெற்று பெருமையோடு வாழ்ந்த சமுதாயம் நம் சமுதாயம். மன்னர் மற்றும் அரசவை பிரதிநிதிகளுக்கு இணையாக மாட மாளிகை அமைத்து அரண்மனைகளை அமைத்துக் கொள்ளவும், சிங்கக் கொடியோடும், சிறப்பான பாதுகாப்போடும் வணிகம் செய்து வாழ்ந்த சமுதாயம் நம் சமுதாயம். பாண்டிய மன்னர் தனது ஆசானையே நம் குலத்திற்கு குருவாகக் கொடுத்து அவர் வழியில் வாழ்ந்த வரலாற்றுச் சிறப்பு மிக்க சமுதாயம் நம் சமுதாயம். இவற்றிற்கெல்லாம் மேலாக மணக்கோலத்தில் காட்சி தரும் அம்மையும் அப்பனும் நம்மை தடுத்தாட்கொண்ட இறைவன் அருள்பெற்ற சமுதாயம் நம் சமுதாயம்.

ஆனால் இன்றைக்கு நாகரீகம் என்கிற பெயரில் நம் பண்பாடு, கலாச்சாரம், ஒழுக்க நெறிகளை எல்லாம் சிதைத்து சிக்கல், சிரமங்களுடன் பல குடும்பங்கள் வாழ்ந்து வருவது மிகவும் வேதனைக்குரியதாகும். உலகில் சிக்கல் அல்லது பிரச்சனைகள் இல்லாத குடும்பங்கள் இல்லை. சிக்கல் அல்லது பிரச்சனை இல்லாத குடும்ப வாழ்க்கையும் இனிக்காது. அதற்காக சிக்கலே வாழ்க்கையாகவும் இருந்துவிடக்கூடாது. சிக்கல் வரலாம். அது நமது நற்சிந்தனையால் சிதறி ஓட வேண்டும். படகு கரை சேர இரண்டு துடுப்புகள் தேவை. பறவைகள் பறப்பதற்கு இரண்டு சிறகுகள் தேவை. **படகின் இரு துடுப்புகளும், பறவைகளின் இரண்டு சிறகுகளும் சீராக ஒற்றுமையாக இயங்கினால்தான் படகு கரைசேர முடியும். பறவைகள் பறக்க முடியும்.**

அதே போன்றுதான் குடும்பம் குதூகலமாய் இருப்பதற்கும் கணவன் மனைவி இருவரின் ஒற்றுமை மிகவும் அவசியமாகும். கணவன் மனைவி உறவில் மிகுந்த பக்குவமும், விட்டுக்கொடுத்தலும், புரிதலும் மிகவும் அவசியமாகும். **கணவன் அறிவு சார்ந்த தடத்தில் அதிகம் நாட்டம் கொள்வதும், மனைவி அன்பு சார்ந்த தடத்தில் அதிக நாட்டம் கொள்வதும் குடும்ப மேன்மைக்கு உரம் போட்டது போலாகும்.** கணவன்-மனைவி இருவருக்கிடையே ஏற்படும் பிரச்சனைகளை அவ்வப்போது அவர்கள் பேசித் தீர்த்துக் கொள்ள வேண்டும். அப்படியில்லாமல் ஒருவரைப் பற்றி ஒருவர் மற்றவரிடம் புறங்கூறினால் நாம் தேடிய புண்ணியம் தேயும். யாரைப்பற்றி புறங்கூறுகிறார்களோ அவர் செய்துள்ள பாவங்கள் அனைத்தும் புறங்கூறுபவரை வந்து சேரும் என்று வேதம் சொல்கிறது. குறையில்லாதவர்கள் எவருமில்லை. அப்படியிருக்கையில் **குறையுள்ள ஒருவர் மற்றவரை குறை சொல்ல உரிமையில்லை என்பதைவிட தகுதியில்லை என்றே சொல்லலாம்.** அந்த வேலையைச் செய்ய இறைவன் நமக்கு உரிமை அளிக்கவில்லை என்பதை நாம் உணர வேண்டும். நமது குறை நிறைகளைக் கவனிக்க கடவுள் இருக்கிறார். கடவுள் பணியை நாம் கையில் எடுக்காமல் அவரவர் கடமைகளை அவரவர் சரிவரச் செய்திட முற்பட வேண்டும்.

**கணவன் மனைவி ஆகியோர்களின் நற்செயல்களால் வீட்டிலே அற்புதமான ஆனந்த அலைகள் பரவும்.** மகிழ்ச்சியும் வளமும் பெருகும். இறைவனின் அருளால் அனைத்து செல்வங்களும் கிட்டும். இதனை உணராமல் இன்று நமது சமுதாயத்தில் பல குடும்பங்களில் கணவன் மனைவியிடையே பிரச்சனைகள் ஏற்பட்டு பிரிந்து வாழ்கிறார்கள். நிரந்தரமாக பிரியும் நிலைகளும் (விவாகரத்து) ஏற்பட்டு குடும்பம் அல்லோலப்படும் நிலை ஏற்படுகிறது. இன்னும் சில குடும்பங்களில் அவர்களின் பெற்றோர்களே பிள்ளைகளின் வாழ்க்கையில் பிரச்சனைகளை உண்டாக்கி விடுகிறார்கள். குழந்தைகளின் வளர்ப்பு, படிப்பு போன்றவைகள் கேள்விக்குறியாகி, குழந்தைகளின் வாழ்க்கை சீர்கெட்டுவிடுகிறது. இதுபோன்ற அவலநிலை நமது சமுதாயத்தில் தொடரவோ, வளரவோ விடக்கூடாது. நமது சமுதாயம் பெருமை வாய்ந்தது. நம் பழம் பெருமையைத் தொடர்ந்து பெற வேண்டும் எனில் நமது வாழ்வியல் நடைமுறைகளையும், கட்டுப்பாடுகளையும், ஒழுக்கத்தையும் இன்றைய காலத்திற்கேற்ப நாம் கடைப்பிடித்து

வாழவேண்டும். அதில் சீர்கேடுகளும் தடுமாற்றங்களும் ஏற்படும்போது அதனைச் செம்மைபடுத்தி சீர் செய்திட நம் சமுதாயப் பெரியவர்களைக் கொண்ட ஒரு அமைப்பை அதாவது **சமரசத் தீர்வு மையம்** (Mediation Centre) என்கிற அமைப்பை அனுபவமிக்க பெரியவர்களைக் கொண்டு ஏற்படுத்தலாம். அம்முயற்சியை பொதுநலச் சங்கத் தலைவர் மேற்கொள்ள வேண்டும் என்பது எனது வேண்டுகோள் மட்டுமல்ல, நமது சமுதாய மக்களின் வேண்டுகோளாகும். இது சமுதாயத்திற்கு செய்யும் பெரிய தொண்டாகும்.

எனவே பொதுநலச் சங்கத் தலைவர் இவ்விஷயத்தில் தாமதமின்றி செயல்பட வேண்டுகிறேன். இது நம் சமுதாயத்திற்கு செய்யும் பெரும் தொண்டு என்பதால் தலைவர் சிறப்புக் கவனம் செலுத்த வேண்டுமாய் அனைவரின் சார்பாக கேட்டுக் கொள்கின்றேன்.

இதுவரை சமுதாய நலம் பேணுவது சம்பந்தமாகப் பார்த்தோம். இனி கல்வி சம்பந்தமான விசயத்திற்கு வருவோம். கல்வி வளர்ச்சிக் கழகம் புதிதாக ஒரு திட்டத்தை அறிமுகப்படுத்தி உள்ளது. தந்தையால் கைவிடப்பட்ட அல்லது தாய் தந்தையர் இல்லாத, ஆதரவற்ற, வறுமையால் வாடும் குழந்தைகளை கல்வி வளர்ச்சிக் கழகம் தத்தெடுத்து அவர்களின் கல்விக் கட்டணம் முழுவதையும் ஏற்றுக்கொள்வது என நிர்வாகிகளிடம் கலந்து பேசி முடிவு எடுத்தோம். இத்திட்டத்தை செயல்படுத்த பெரிய-சிறிய அல்லது முழுமையாக நிதி உதவி செய்ய விரும்பும் நன்கொடையாளர்களை ஏற்றுக் கொள்ளலாம் என முடிவு செய்யப்பட்டது. இத்திட்டம் அறிவிக்கப்பட்டவுடனே கல்லம்பட்டி N.விக்னேஷ், ஆலவயல் அ.சாரதி, சிறுகுடி M.மீனாட்சி ஆகிய மூவரும் தங்களின் கல்வியைத் தொடர உதவி கோரினார்கள். இவர்களுக்கு தந்தை (சம்பாதிக்கும் உறுப்பினர்-Earning Member) கிடையாது. தாயாரால் இவர்களின் கல்விக்கு உதவிமுடியவில்லை. கல்வி வளர்ச்சிக் கழகத்திடம் தங்களின் நிலையை எடுத்துக் கூறி உதவி கோரினார்கள். இவர்கள் முழு கல்விக்கட்டணத்தையும் கல்வி வளர்ச்சிக் கழகம் ஏற்றுக்கொள்ளலாம் என முடிவு செய்து, இத்திட்டத்தை அறிவித்தவுடன் நம் கழக இணைத் தலைவரான திரு. A.P. ஸேதுராமன் அவர்களும், பொதுநலச் சங்க துணைத் தலைவர் Lion திரு. க. இளங்கோவன் அவர்களும் நம் கழக செயலாளர்

திரு. சுப. செல்வம் அவர்களும் மேற்கண்ட மூவரின் கல்விக் கட்டணத்தை ஏற்றுக் கொண்டார்கள். இத்திட்டத்தை செயல்படுத்த சங்கங்களும், உறுப்பினர்களும் நன்கொடைகள் வழங்கி நம் சமுதாயத்தில் அனைவருக்கும் கல்வி கிடைக்க உதவிட வேண்டுகிறோம். கடந்த மே மாத குரலில் இத்திட்டம் தொடர்பாக உதவித் தொகைக்கு விண்ணப்பிப்பவர்கள், சிபாரிசு செய்பவர்கள் கவனத்தில் கொள்ள வேண்டிய விசயங்கள் குறித்தும் குறிப்பிட்டுள்ளதைக் கடைப்பிடிக்க வேண்டுகிறேன்.

**“அன்ன சத்திரம் ஆயிரம் கட்டி ஏழைகளுக்கு உணவு அளிப்பதைவிட ஓர் ஏழைக்கு எழுத்தறிவித்தல் அல்லது அதற்கு உதவுதல் உயர்ந்த தர்மம்”** என வேதம் சொல்கிறது. அதனால் தங்களால் இயன்ற அளவு பொருளுதவி (நன்கொடை) வழங்க சங்கங்களும், உறுப்பினர்களும் முன்வந்து தர்மத்தின் வழி நிற்போம் என கேட்டுக்கொள்கின்றேன்.

**ஏழை மாணவர்களின் கல்விக்கு உதவுவோம்!**
**புண்ணியங்களைச் சேர்ப்போம்!!**

**அருவியூர் வடக்குவளவு நகரத்தார்**

**பொதுநலச் சங்கம்**

# புதிய நிர்வாகிகள் அறிவிப்பு

18.07.2021 அன்று பிரான்மலையில் பொதுநலச் சங்கத்தின் நிர்வாகக்குழு கூட்டம் நடைபெற்றது. அன்றைய தினம் பொதுநலச்சங்கத்தின் 2021 - 2024ம் ஆண்டிற்கான நிர்வாகம் அமைக்கப்பெற்று துணை நிர்வாகிகள் நியமிக்கப்பட்டார்கள்.

**தலைவர்** : திரு. **M.S. முருகப்பன்**

**செயலாளர்** : திரு. **மு. சாமிநாதன்**

**பொருளாளர்** : திரு. **S. மங்கைபாகன்**

**துணைத் தலைவர்கள்** : திரு. S. இளங்கோ,
: திரு. M.ராமசாமி
: திரு. G.இளங்கோவன்
: திரு. மைனர். வெள்ளைச்சாமி
: திரு. சொ. இராமநாதன்.

**துணைச் செயலாளர்கள்** : திரு.M.இளங்கோவன்.
: R.M.S. ராஜா, M.சரவணன், M.அருணகிரி,

**அறங்காவலர்** : திரு.சொ. செந்தில்குரு.

**பழனிமட நிர்வாகிகள்** : திரு.தே. பரமானந்தம் செட்டியார்
திரு. N. செல்வம் செட்டியார். திரு. A.P.ஸேதுராமன்

**சேமிப்புத் திட்ட பொறுப்பாளர்கள் :**
திரு. STKRS.சுந்தரமூர்த்தி திரு. M.சரவணன்

**தணிக்கையாளர்கள்** : திரு.பொன்.சிவஞானம் & திரு.RMK. குமார்

மேலும் கூட்டத்தில் புதிய நிர்வாகத்தில் எடுக்கப்பட வேண்டிய முக்கிய வேலைகள் சம்பந்தமாக ஆலோசனைகள் செய்யப்பட்டது. இதனைத் தொடர்ந்து சாத்தனூர் மங்கைநாயகர் முந்திரி தோட்டம் சம்பந்தமாக முன்னாள் தலைவர்கள் : திருவாளர்கள் இராமநாதன் செட்டியார், வேலாயுதம் செட்டியார், Er.மாணிக்கம் செட்டியார் கல்வி வளர்ச்சிக் கழகத் தலைவர் ஆசைஅலங்காரம் இவர்களுடன் கலந்து பேசி முடிவு செய்யப்பட்டது. **- தகவல் M.சாமிநாதன் செயலாளர்.**

# தமிழக முதல்வர் நிவராணநிதிக்கு – சிறுகுடி நகரத்தார்களின் நன்கொடை





தமிழக முதல்வர் பொதுநிவாரண நிதிக்கு, கொரனா பெரும்தொற்று நிவாரண நடவடிக்கைகளுக்காக, சிறுகுடி அருவியூர் வடக்குவளவு நகரத்தார் சங்கம் சார்பாக திண்டுக்கல் மாவட்ட ஆதி திராவிட நலத்துறை அதிகாரி (சார் ஆட்சியர்) மற்றும் நத்தம் வட்டாட்சியர் திருமதி விஜயலட்சுமி அவர்களிடம் 26-05-2021 அன்று ரூ.1,00,000/- (ரூபாய் ஒரு லட்சம் மட்டும்) -க்கான வரைவு காசோலை வழங்கப்பட்டது.

நிகழ்ச்சியில் சிறுகுடி அ.வ.ந. சங்கத் தலைவர் திரு பொன். சிவஞானம் செட்டியார், செயலாளர் திரு மா. ஆசை அலங்காரம் செட்டியார், பொருளாளர் திரு ஞா. மைனர் வெள்ளைச்சாமி, கல்வி வளர்ச்சிக் கழகத் தலைவர் திரு செ. ஆசை அலங்காரம் செட்டியார், பொதுநலச் சங்க முன்னாள் தலைவர் திரு. Er. ம. மாணிக்கம் செட்டியார், சிறுகுடி சங்க நிர்வாகிகள் திருவாளர்கள் ச.பெ. செல்வராஜ் செட்டியார், கு.ந. சக்திவேல் செட்டியார், திரு மு. வைத்திலிங்கம் செட்டியார், நத்தம் திரு தி.தே. திருவம்பலம் செட்டியார், திரு அ. கண்ணன் செட்டியார் மற்றும் சிறுகுடி ஊராட்சி மன்றத் தலைவி திருமதி கோகிலவாணி வீரராகவன், சிறுகுடி கிராம நிர்வாக அதிகாரி திரு பா. சிவக்குமார், உதவியாளர் திரு தனபால் ஆகியோர் கலந்துகொண்டனர்.

வரைவு காசோலையைப் பெற்றுக்கொண்ட திண்டுக்கல் மாவட்ட சார் ஆட்சியர் அவர்கள் நகரத்தார் அனைவருக்கும் நன்றியையும், வாழ்த்துக்களையும் தெரிவித்தார்கள்.

**தகவல்: திரு. மா. மைனர் வெள்ளைச்சாமி, சிறுகுடி.**

## பொதுநலச் சங்கத்தின் சார்பாக ஆதரவற்றோர்க்கான நிதிஉதவி வழங்குதல் 2021

அ.வ.ந. பொதுநலச் சங்கத்தின் சார்பாக நமது சமுதாயத்தில் உள்ள ஆதரவற்ற முதியோர்களுக்கு மாதந்தோறும் உதவித்தொகை வழங்கி வருவதை அனைவரும் அறிவீர்கள். இதன் தொடர்ச்சியாக 10.06.2021 அன்று மேற்படி ஆதரவற்ற முதியோர்களுக்கு கொரனா உதவியாக அரிசி, மற்றும் சமையல் பொருட்களின் மதிப்பு ரூ.1500 (பொன்னமராவதி அ.வ.ந. சங்கத்தின் சார்பாகவும், மற்றும் சென்னை அம்மன்குறிச்சி வெ. ராம.சுப்பிரமணிய செட்டியார் அன்னபூரணி ஆச்சி அறக்கட்டளை சார்பாக ஒவ்வொருவருக்கும் ரூ.300ம் வழக்கமாக மாதந்தோறும் வழங்கும் நிதி ரூ.200ம் சேர்த்து ஆக ரூ.500ம் பொதுநலச் சங்க நிர்வாகிகளும், பொன்னமராவதி சங்க நிர்வாகிகளும் இணைந்து நேரடியாகச் சென்று வழங்கினார்கள். இத்துடன் அரிசி மற்றும் சமையல் பொருட்களுக்காக ரூ.10,900, வெ.ராம. சுப்பிரமணிய செட்டியார் அன்னபூரணி ஆச்சி அறக்கட்டளை சார்பாக வழங்கினார்கள்.

**- தகவல் M.சாமிநாதன் செயலாளர்.**

சமூக சிந்தனை

# பெண்ணின் மூலநட்சத்திரம் நிர்மூலமா? நிர்மனமா?



வரன் தேடுபவர்கள் பெண் நட்சத்திரம் மூலம் எனச் சொன்னதுமே "வேண்டாம்" என்கிறார்கள். இதற்கு விளக்கம் என்ன? பெண்ணுக்கு வாழ்வு இல்லையா? என்ன மன வேதனை? பெண்ணைப் பெற்ற பெற்றோர்கள் மன வேதனையில் உள்ளார்கள். அதைவிட பெண் பிள்ளைகள் மனம் எவ்வளவு வேதனை அடையும். ஒவ்வோர் குடும்பத்திலும் ஆண்-பெண் பிள்ளைகள் உள்ளனர். ஆண்பிள்ளை பெற்றோர்கள் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக-நான் படித்ததையும், தொலைக்காட்சி வாயிலாக கேட்டதையும் மற்றவர்களும் அறிந்துகொள்ள ஏதுவாக பதிவு செய்ய விரும்புகிறேன்.

**கேள்வி :** என் மகளுக்கு மூன்று வருடங்களாக வரன் தேடுகிறேன்... சுமார் 50 வரன்கள் மேல் வந்தும் பிள்ளை வீட்டார், பெண் "மூல நட்சத்திரம்" என்பதால் நிராகரித்து விடுகிறார்கள். என்ன செய்வது?

**பதில் :** ஆண் மூல நட்சத்திரம் அரசாளும். பெண் மூல நட்சத்திரம் நிர்மனம் என்பதை நடைமுறையில் பெண் மூலம், நிர்மூலம் என தவறாகப் புரிந்து வருகிறார்கள்.

நிர்மனம் என்றால் மாமியார்-மாமனார் மற்றும் குடும்பத்தில் உள்ளவர்களிடம் ஒற்றுமையுடன் வாழ்க்கை நடத்தி புகுந்த வீட்டில் பிறந்த பெற்றோர் பெயர் விளங்கிடவும், செல்வச் சிறப்போடும் வாழ்வார்கள். எனவே நிர்மூலம் என்பதை நிர்மனம் என புரிந்து பெண் எடுப்பது நல்லது. மாறாக ஒதுக்குவது பெண்ணுக்கு செய்யும் பெரும் பாவச் செயல் ஆனது போலாகும்.

அனுபவமிக்க ஜோசியர்களிடம் ஜாதகத்தை கணித்தால் மற்ற கிரகநிலை ஆராய்ந்து பார்த்து பொருத்தம் அமைய வழி சொல்லுவார்கள். நாமாக ஒதுக்குவதில் பிள்ளைகளின் காலமும் போய்விடுகிறது.

எனவே பெண் தேடும் ஆண் பெற்றோர்கள், மருமகள்,பேரன்-பேத்தியோடு வாழ்வாங்கு வாழவேண்டும் என நினைப்பவர்கள்; தயக்கமின்றி பெண் எடுக்க முன்வந்து காலத்துக்கு ஏற்ப சூழ்நிலைகளை மாற்றுவது போல; நீதிநூலில் உள்ளபடி "ஒப்புரவு ஒழுகு" (உலக அனுபவத்தை அறிந்து அதற்கேற்ப நடந்த கொள்) என்பதை நினைவில் கொண்டு வாழ்வில் வளம்பெற எல்லாம் வல்ல இறைவனை வேண்டுகிறேன்.

**- பி.எல்.ஆர், கோவை.**

# திண்டுக்கல் அ.வ.ந. சங்க வேண்டுகோள்

**செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது. - திருக்குறள்**

திண்டுக்கல் அ.வ.ந. சங்கத்தின் மங்கைநாயகர் மண்டபத்தின் வளர்ச்சி நிதிக்காக (பராமரிப்பு மற்றும் கடன்களைத் திருப்பி செலுத்துவதற்கும்) நமது நகரத்தார்களிடம் இருந்து நன்கொடைகள் வரவேற்கப்படுகிறது. ரூ.5000 நன்கொடை வழங்குபவர்களின் போட்டோ (19X13சைஸ்) திருமண மண்டபத்தில் வைக்க ஏற்பாடு செய்கின்றோம்.

தொடர்புக்கு அணுகவும் :
**திரு. பொ. சிவனேசன் அவர்கள்.**
தலைவர். அ.வ.ந.சங்கம். திண்டுக்கல்.
செல் : 94420 29602 - 93442 60462

# ஆன்மிக பாடல் ஒப்புவித்தல் போட்டி



**ஆடிக் கிருத்திகை முன்னிட்டு : கந்தகுரு கவசம் பாடலையும், ஆவணி மாதம் நடராஜர் அபிஷேகத்தை முன்னிட்டு : நடராஜர் பத்து பாடலையும் ஒப்புவிக்கும் போட்டி. வயது வரம்பின்றி அனைவரும் கலந்து கொள்ளலாம். பாடல்களை வீடியோ பதிவு செய்து 20.9.2021க்குள் செல் : 99428 03031 என்ற வாட்ஸ்அப் எண்ணிற்கு அனுப்பவும்.**

**சிறப்புப் பரிசு விபரம் :** ரூ.1000 கந்தகுரு கவச பாடலுக்கு
: ரூ.500 நடராஜர் பத்து பாடலுக்கு.

**போட்டி நடத்துவர் :** வெ.ராம.சுப்பிரமணிய செட்டியார்
& அன்னபூரணி ஆச்சி அறக்கட்டளை.
நங்கநல்லூர், சென்னை - 71



குறிப்பு : பாடலை இரண்டு அல்லது மூன்று தொகுதிகளாகப் பிரித்து வீடியோ எடுத்து அனுப்பலாம்.

மேலும் விபரங்களுக்கு : சுப. நேசமணி. செல் : 99428 03031

அதிசயக் கோயில்கள்

# திருநல்லூர்
# கல்யாண சுந்தரேஸ்வரர் கோயில்

குரல் ஆசிரியர். சுப. செல்வம்

**தல வரலாறு :**

திருவானைக்காவல் ஆலயத்தில் உள்ள ஐம்புலிங்கப் பெருமானை தனது முற்பிறவியில் சிலந்தியாக இருந்து வழிபட்டவன் கோச்செங்கட் சோழ மன்னன். இந்த மன்னன் சிவபெருமானுக்கு யானை ஏறாத மாடக்கோவில்களாக எழுபது கோவில்களை அமைத்தான்.

அப்படி அமைத்த கோவில்களில் பெரிய அளவில் அமைந்த கோவிலே, திருநல்லூரில் அமைந்துள்ள கல்யாண சுந்தரேஸ்வரர் கோவிலாகும். கல்யாண சுந்தரேஸ்வரர் என்ற திருநாமத்தைத் தவிர, சவுந்திர நாயகர், சுந்தரநாதர், பஞ்சவர்ணேஸ்வரர், அமிர்தலிங்கர், திருநல்லூர் உடைய நாயனார் என பலப்பெயர்களிலும் இத்தல இறைவன் போற்றி வழிபடப்படுகிறார்.

இக்கோவிலில் உள்ள லிங்கத்தின் பாணம், இன்ன பொருளால் உருவாக்கப்பட்டது என்று கூற இயலாத வகையில் தாமிர நிறத்தில் காணப்படுகிறது. இங்குள்ள **இறைவன் இன்றும் ஐந்து வகையான நிறத்துடன் தினந்தோறும் காட்சி தருவது பக்தர்களை மெய்சிலிர்க்க வைக்கும் காட்சியாக இருக்கிறது.**

சுயம்புவான இந்த லிங்கம் 6 நாழிகைக்கு ஒரு முறை நிறம் மாறும் தன்மை கொண்டதாகும். காலை 6 மணி முதல் 8.25 மணி வரை தாமிர நிறத்திலும் 8.26 மணி முதல் 10.48 மணி வரை இளம் சிவப்பு நிறத்திலும், 10.49 மணி முதல் பகல் 1.12 மணி வரை உருக்கிய தங்கம் போன்ற நிறத்திலும், 1.13 மணி முதல் 3.36 மணி வரை நவரத்தின பச்சை நிறத்திலும், மாலை 3.37 மணி முதல் 6 மணி வரையிலும் இன்ன நிறம் என்று அறிய முடியாத வண்ணத்திலும் இறைவன் காட்சி தருவார் என்பது இக்கோவிலின் அதிசயமாகும். இந்த அற்புதம்

வேறு எந்த தலத்திலும் காணக்கிடைக்காத இறையருள் காட்சியாகும். இந்த மூல லிங்கத்தின் அமைப்பில் மற்றொரு சிறப்பும் இருக்கிறது. அது யாதெனில் இந்த லிங்கத்தின் ஆவுடையார் தென்வடலில் மிக நீண்ட சயனக்கோல் வடிவமானது. **மேலும் ஆவுடையாரில் இரண்டு பாணங்கள் உள்ளன.**

இப்படி இரண்டு பாணங்கள் உள்ள அமைப்பு வேறு எங்கும் இல்லை என்று சொல்லப்படுகிறது. மூலவர் லிங்கம் அமைந்த கருவறையில் சுதை வடிவில் அமர்ந்த கோலத்தில் சிவபெருமானும், அம்பாளும் இருக்க, இருபுறமும் திருமாலும், பிரம்மதேவரும் நின்ற கோலத்தில் உள்ளனர்.

கோவிலில் உள்ள அம்பாளின் பெயர் கிரிசுந்தரி என்பதாகும். மலை அழகி, தருமலைச் சொக்கி என்ற திருநாமத்திலும் அம்பாள் அழைக்கப்படுகிறாள். மிகப்பெரிய வடிவில், பேரழகு கொண்டவளாக சுவாமிக்கு வடகிழக்கில் தனிக்கோவிலில் தென்முகமாக நின்ற கோலத்தில் அருள்பாலிக்கின்றாள் இத்தலத்து அன்னை. இந்த ஆலயமானது கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. ஐந்து நிலை ராஜகோபுரத்தைக் கடந்ததும் கொடிமரத்துப் பிள்ளையார், கொடிமரம், பலிபீடம், இட்டத் தேவரின் சன்னிதி ஆகியவை உள்ளன.கொடி மரத்தின் இடதுபுறத்தில் அமர் நீதியார் தராசு மண்டபமும், வலது புறம் உற்சவ மண்டபமும் அமையப் பெற்றுள்ளன. அதைத் தொடர்ந்து மூன்று நிலைகளுடன் கூடிய உட்கோபுரம் உள்ளது. உள்ளே இடதுபுறம் தேவர்கள் பூஜை செய்த லிங்கங்களும், வலதுபுறம் சனீஸ்வரர், பைரவர், சந்திரன் ஆகியோரும் அருள்பாலிக்கின்றனர்.

இதையடுத்துள்ள காசி பிள்ளையாரைக் கடந்து சென்றால் அழகிய மண்டபம் இருக்கிறது. அதன் வலதுபுறம் கிரிசுந்தரி அம்பாளின் சன்னிதியும், அம்பாள் சன்னிதியின் எதிரில் மூலவர் கல்யாண சுந்தரேஸ்வரர் சன்னிதியும் அமைந்துள்ளன. தேவக் கோட்டத்தின் தென்புறம் தட்சிணாமூர்த்தியும், வடபுறம் துர்க்கையும் அருள்பாலிக்கின்றனர்.

உட்பிரகாரத்தின் மேற்கு திசையில் சப்தமாதர்கள், தேவர்கள் பூஜித்த சிவலிங்க திருமேனிகள், முருகப்பெருமான்,

மகாலட்சுமி, ஆகியோரின் திருமேனிகளும், வடக்கு பிரகாரத்தில் சண்டிகேஸ்வரர், நடராஜர் ஆகியோரின் திருமேனிகளும் அமைப்பெற்றுள்ளன.

இந்த ஆலயம் மாடக்கோவில் அமைப்பில் உள்ளது. எனவே யானை ஒன்று பெருமான் இருப்பிடத்தைச் சென்று அடைய முடியாதபடி பல படிக்கட்டுகளுடன் உயர்ந்து நேர் வாசல் இன்றி, இக்கோயில் அமைந்துள்ளது.

ஆகையால் இங்கு மூல லிங்கம் 14 அடி உயர மேற்பரப்பில் மிக உயர்ந்த விமானத்துடன் கிழக்கு நோக்கியும் அம்பாளின் சன்னிதியின் விமானம் சற்றே சிறியதாகவும் உள்ளது. இவ்விரண்டு சன்னிதிகளுக்கும் செல்லும் வாசல்படி உள் திருச்சுற்றின் தென்பக்கம் கிழக்கு நோக்கி ஏறும் படிகளும் அமைக்கப்பட்டுள்ளது.

இரண்டு திருச்சுற்றுக்களைக் கொண்ட இந்த ஆலயம் 316 அடி நீளமும், 228 அடி அகலமும் கொண்டது. **திருநல்லூர் திருத்தலத்தில் மேற்கு கோபுர வாசலின் மேற்புறம் பலிபிட வடிவில் இருக்கும் கணநாதரின் திருவுருவம் இங்கும் காசியிலும் மட்டுமே காணக்கூடியது மற்றுமொரு சிறப்பு.**

ஆண்டுக்கு ஒரு முறை நடக்கும் **கணநாதர் பூஜை** என்னும் சிறப்பு வழிபாட்டின்போது திருநல்லூர் மற்றும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகளைச் சேர்ந்த பொதுமக்கள் தங்கள் வீடுகளில் உள்ள பசுக்கள் ஒரு வேளை கறக்கும் பாலை அப்படியே ஆலயத்திற்கு கொண்டு வந்து கொடுத்து, இறைவழிபாட்டில் கலந்து கொண்டு சிறப்பிப்பார்கள்.

சப்த சாகரம், அக்னி தீர்த்தம், நாக கன்னி தீர்த்தம், தர்ம தீர்த்தம், தேவ தீர்த்தம், பிரம குண்டம், ஐராவத தீர்த்தம், சந்திர தீர்த்தம், காவிரி தீர்த்தம் என பல தீர்த்தங்கள் இந்த ஆலயத்தில் உள்ளன. தல விருட்சம் வில்வ மரமாகும். பிரம்மதேவர், சிவபெருமானை பூஜித்து வழிபட்ட தலங்களில் சிறப்பு வாய்ந்தது இதுவாகும்.

ஆம் பிரம்மதேவருக்கும், திருமாலுக்கும் யார் பெரியவர் என்ற போட்டி நடைபெற்றது. அதில் சிவபெருமானுடைய முடியைக் கண்டேன் என்று பொய் உரைத்தார் பிரம்மதேவர். அந்தத் தீவினையைப் போக்கிக் கொள்ள இந்தத் தலத்தில் தன் பெயரால் பொய்கை ஒன்றை ஏற்படுத்தி அதில் நீராடி ஈசனை பூஜித்து பேறுபெற்றார்.

அவர் நிறுவிய தீர்த்தம், பிரம்ம தீர்த்தம் என்றானது. இது தற்போது **சப்தசாகரம்** என்று அழைக்கப்படுகிறது. ஒரு முறை பாண்டவர்களின் தாய் குந்திதேவி இத்தலத்தை வந்தடைந்தபோது நாரத முனிவரை சந்தித்தாள். அன்று மாசி மகம் என்பதால் கடலில் நீராடுவது மிகவும் புண்ணியம் என்று குந்தியிடம் நாரதர் கூறினார்.

குந்திதேவி இறைவனிடம் வேண்டினாள். இதையடுத்த சிவபெருமான் குந்திதேவிக்காக உப்பு, கரும்பு, தேன், நெய், தயிர், பால், சுத்த நீர் ஆகிய ஏழு கடல்களையும் பிரம்ம தீர்த்தத்தில் சேருமாறு அருளினார். அதில் குந்திதேவி நீராடி சிறப்படைந்தாள் என்பது வரலாறு.

## திருத்தலம் செல்லும் வழி:

தஞ்சாவூர்-கும்பகோணம் சாலையில் உள்ளது பாபநாசம். இங்கிருந்து 3 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது திருநல்லூர் திருத்தலம். நாம் அனைவரும் திருநல்லூர் சென்று தினமும் 5முறை நிறம் மாறும் கல்யாண சுந்தரேஸ்வரரை வணங்கி அருள் பெறுவோம். வாருங்கள்.



அழும் நிறைந்த அன்னைக்கு

**ஐந்தாம் ஆண்டு நினைவு அஞ்சலி**

பூவுலகில் பூவாய்! மேல் உலகில் தெய்வமாய்!
வாழும் எங்கள் அன்பு அன்னையே!!!
அன்பும் அகமும் உன்னை தேடுதே...
நீங்கள் நினைத்தது நடந்தது...
உங்கள் மகனின் திருமணம்!
மாபெரும் திருவிழாவாய்!!!
ஆனால் அத்திருவிழாவில் தெய்வம் மட்டுமில்லை...
நிகழ்வுகள் ஊர்மெச்ச நடந்தாலும்
மனம் நினைத்தது உன்னை தானே அம்மா!
அப்பாவின் கண்ணின் மணியாய்
ஒளி கொடுக்கவேண்டிய நீயோ!
அவரின் கண்ணீர் துளியாய்
வலி கொடுக்கின்றாயே... அம்மா!!!
சில நினைவுகள் காலம் தாண்டி
அழியாத சுகங்கள் தரும்...
எங்கள் அன்பு அன்னையே,
அந்நினைவுகளோடு பயணிக்கின்றோம்...

மகன்: **T.மணிரத்னம்** B.E.,
மருமகள்: **M.ஆர்த்தி** BBA.,(MIB)
மகள்: **S.ராஜபிரியா** B.Sc.,
மருமகன்: **S.சரவணன்** D.Pharm.,
பேத்தி: **S.ஷாலினி**
பேரன்: மாஸ்டர் **S.சஞ்சய்**
**தொண்டாமுத்தூர்.**

மகள்: **R.சுகன்யா** B.Sc.,
மருமகன்: **S.ரவிராஜன்**
பேரன்: **R.ஸ்ரீதர்**
**பொன்னமராவதி.**

மற்றும் **குடும்பத்தார்கள், உறவினர்கள்**

நகரத்தார் குரல் சிறக்க வாழ்த்துக்கள்!

தலைமுறைகள் நீடித்து நிற்கும் கட்டிடங்களின் நம்பிக்கை



ATC

# அன்பு வணிக நிலையம்

அண்ணாசாலை, பொன்னமராவதி - 622 407.

போன்: 04333 262095 செல்: 94421 60385, 94434 13223

**Texmo Industries**
Est. 1956
**டேரோ பம்புகள்**

மகத்தான அறுவடையின் ரகசியம்



Taro Pumps






























TATA TISCON SD
SUPER DUCTILE REBARS

Birla White
THE WHITEST WHITE CEMENT

FinOlex INDUSTRIES

# 100-வது பிறந்தநாள் விழா

19.06.2021



கல்விக்காவலர், கல்லம்பட்டி

தெய்வத்திருவாளர்கள் **மு.சி.கி. நாராயணன் செட்டியார்-ராஜமாணிக்கம் ஆச்சி**



பெற்றோர்:

தெய்வத்திருவாளர்கள்

**மு.சி. கிருஷ்ணன் செட்டியார்- அங்கம்மாள் ஆச்சி**



மாமனார் மாமியார்:

தெய்வத்திருவாளர்கள்

**பெ.அ.அ. அருணாச்சலம் செட்டியார்- சர்க்கரை ஆச்சி**



தாய்மாமன்:
பழனியப்பா செட்டியார்-அமிர்தம் ஆச்சி



மைத்துனர்:
டாக்டர் அ.அலங்காரம் செட்டியார்-ராசு ஆச்சி



சகோதரர்:
பழனிச்சாமி செட்டியார்-பொன்னழகி ஆச்சி



சகோதரி:
மீனாம்பாள் ஆச்சி-துரைச்சாமி செட்டியார்



சகோதரி:
பார்வதி ஆச்சி - சண்முகம் செட்டியார்



சம்பந்தி:
சண்முகம் செட்டியார்- திருவாயி ஆச்சி



சம்பந்தி:
மலை. சோமசுந்தரம் செட்டியார்-சௌந்திரம் ஆச்சி



சம்பந்தி:
சண்முகம் செட்டியார் - பார்வதி ஆச்சி

# பெற்றோருக்கு பெருமை சேர்த்த தவப்புதல்வி & தவப்புதல்வர்கள்



சிவயோகம்-
தேனப்பன்



நா. அருள்பிரகாசம் -
ஆண்டாள்



நா. சுப்பிரமணியன் -
தமிழ்செல்வி



நா.ஜெயராமன் -
தேன்மொழி

கல்விக்காவலர், கல்லம்பட்டி

தெய்வத்திரு



**மு.சி.கி. நாராயணன் செட்டியார்** அவர்களின்

100 ANNIVERSARY வது

# பிறந்த ஆண்டு நிறைவு

## 19.06.2021

# வாழ்த்துப்பா



அருவியூர் வடக்குவளவு நகரத்தார் சமூகத்தில்
பெருமைமிகு கழனிவாசலுருடையார் குடிப்பட்டம்
கிருஷ்ணன் செட்டியார் – அங்கம்மாள் ஆச்சி
கருவிலே தோன்றிய தலைமகன், தவப்புதல்வன்!
திருவுடை மார்பன் பெயர் பெற்ற புண்ணியர்
கருணைமிகு மனத்தினர்! கட்டையம்பட்டி பூர்வீகம்!
பெரிய செட்டியார், சீனி செட்டியார் வழித்தோன்றல்
பெருவணிகர்,கவினுறை,கல்லம்பட்டி நல்லூரார்!
திரு மு.சி.கி. நாராயணன் செட்டியார் அவர்கள்.



குருவான ஞானியார் மடம் திகழும் உலகம்பட்டி
அருணாசலம் செட்டியார் – சர்க்கரை ஆச்சி மகள்
திருமகள் போன்றவர் ராஜமாணிக்கம் ஆச்சி கைபிடித்து
அருமையுடன், இல்லறத்தை நல்லறமாய் நடத்தினார்!



இராமனுக்கு இலக்குவன்போல் இனிய குணங்கள் கொண்ட
ஒருவர் தம்பியாம்! உத்தமராம்! எச்செயலும்
திருத்தமாய் செய்திடும் – பழனிசாமி செட்டியார்
பொருத்தமாய் வந்த துணை – பொன்னழகி ஆச்சி



இருவர் தங்கையாய் இனிதே அமைந்தாரே
ஒருவர் மீனாம்பாள். மற்றொருவர் பார்வதியாம்!
பெருமைமிகு புதூர் துரைசாமி செட்டியாரும்,
அருமைமிகு அம்மன்குறிச்சி–சென்னை சண்முகம் செட்டியாரும்
பெருமக்கள் இருவருமே மாண்புமிகு மைத்துனர்கள்



கருவில் கனிந்த நற்கனிகள் மக்கள் நால்வராம்
உருமாறி வந்ததொரு திருமகள் போன்றவர்
ஒரு மகளாய் பிறந்த பெண் மகள் சிவயோகம்
பெருவணிகர் செம்பூதி சண்முகம் செட்டியார்
திருவாயி ஆச்சி தம்பதிகள் தான்பெற்ற
திருமகனாம் தேனப்பன் செட்டியாரை
மருமகனாய்க்கொண்டு மனமகிழ்ந்து உவந்தார்





கருவில் திருவுடைய ஆண்மக்கள் மூவராம்
அருள்பிரகாசம், சுப்பிரமணியன், ஜெயராமன் என்றே
பெருமைதரும் பெயர் வைத்து மகிழ்ந்தார் நன்றே!



கருத்தாக, கல்விக் காவலர் யெனும் பெயர்க்கேற்ப
தரணியில் தம்மக்கள் தலை நிமிர்ந்து வாழ்ந்திட
திருக்குறளில் வள்ளுவப் பெருந்தகை கூறியதுபோல்
"ஒருவற்குக் கேடில் விழுச்செல்வம் கல்வி" யென்று
அறிந்தார். வீடு, மனை, நிலபுலன்களை துச்சமென
துறந்தார், துணிந்தார், 1959 ஆம் ஆண்டே தஞ்சை மாவட்டம்
பெயர்ந்தார் மக்களை பொறியாளராக, வங்கி மேலாளராக,
பட்டய கணக்காளராக மெருகேற்றி மகிழ்ந்தார்.



குருவாகி மக்களுக்கு நல்லறிவு நல்கினார்
ஒரு குறையும் நேராது உத்தமராய் வளர்த்தார்
பெருமான் நாராயணர் மக்களும் அவ்வாறே
அரிய ராஜ மாணிக்க கற்களாய் ஒளிர்ந்தனர்
ஒரு நாளும் தவறாது தந்தை வழி நடந்து
பெருமை சேர்த்து பெற்றோரை காத்தனர்.

அருள்நிதியாம், சோதிடராம், அம்மன்குறிச்சி பூர்வீகம்
தருமமிகு சென்னையிலும் வாழ்ந்த செம்மல்
குருஜி சண்முகம் செட்டியார்-பார்வதி ஆச்சி மூத்த மகள்
அருமை ஆண்டாளை மூத்த மகனுக்கும், அடுத்த மகள்,
முருகுசுவை தேன்மொழியை இளைய மகனுக்கும்
திருமணம் முடித்து மகிழ்வு கொண்டார்.



பெரும்புகழ் பெற்றவராம். பொன் புதுப்பட்டி நகரின்
பெரு வணிகர் தமிழ்ப் புலவர், சைவ நெறி போற்றும்
பெருமகனார் மலை சோமசுந்தரம் செட்டியார்
திருமதி சௌந்தரம் ஆச்சி பெற்ற தவப்புதல்வி
அருந்தமிழில் பட்டம் பெற்ற தமிழ்செல்வி தன்னை
இரண்டாம் மகனுக்கு மணம் முடித்து மகிழ்ந்தார்.

கருணைமிக்க மாந்தர்வாழ் கல்லம்பட்டி நல்லூரில்
மருள்நீக் கும் மாதுளவல்லி உடனாய மதனீஸ்வரர்
அருள்செய்யும் சிவாலய திருப்பணியும் செய்தார்.
அருட்கொடையும் ஈந்தார் எம்மான் நாராயணரே!
நாராயணர் அவதரித்த நூறாண்டு நிறைந்ததுவே!
ஆராதனை செய்து அவர் பாதம் பணிந்தோமே!!!
என்றும் நீங்கா நினைவில்,

**- கவியாக்கம், மீனாட்சி ஷிவபாரதி. (தங்கை பார்வதிஆச்சி மகள்)**

மக்கள்,

**நா. அருள்பிரகாசம் - ஆண்டாள்**
**நா. சுப்பிரமணியன் - தமிழ்செல்வி**
**நா.ஜெயராமன் - தேன்மொழி**
**மற்றும் பேரன், பேத்திகள்**

உ



சிறுகுடி தெய்வத்திரு எம். சண்முகம் பி.இ.
அவர்களின் நல்லாசியுடனும்,
பொதுமக்களின் பேராதரவுடனும்
7-ஆம் ஆண்டாக வெற்றிநடை போடும்

# அர்ச்சனா ஜெனரல்ஸ்
# காளான்
## விற்பனை நிலையம்



**எங்களிடம் தங்கள் விசேஷத்திற்குத் தேவையான**



- பனீர்
- பட்டர்
- கோவா
- சீஸ்
- பால், தயிர்
- பேபிகார்ன்
- ஸ்வீட் கார்ன்
- ரெடிமேட் பூரி
- ரெடிமேட் புரோட்டா
- ரெடிமேட் சப்பாத்தி
- தண்ணீர் பாட்டில்
- ஐஸ்கிரீம்
- காளான் ஊறுகாய்
- ஸ்ரீதேவி பிரியாணி பேஸ்ட்
- Frozen Items

**ஆர்டரின் பேரில் ஏற்பாடு செய்து தரப்படும்.**

S. பழனியப்பன் B.E.,
✆ 90257 87637, 70107 91246



# அர்ச்சனா ஜெனரல்ஸ்
# காளான்
## நேரடி விற்பனை நிலையம்
**(மொத்தம் & சில்லரை விற்பனை)**

தலைமை தபால் நிலையம் எதிரில், ST கொரியர் அருகில்,
ஸ்கீம் ரோடு, திண்டுக்கல் - 624 001.
E-mail : archanaageneralsdgl@yahoo.in

**ஆன்மிகத்தொடர் - 9**

## திருத்தொண்டர் பெருமை

## திருத்தொண்டர் வரலாறு

திருமுறைத் திருப்பணித் தொண்டர், சைவப் புலவர் -
சிவகுரு வா.நா. சுந்தரம் எம்.ஏ., திருவையாறு



### பகுதி 5 - விறண்மிண்டர் நாயன்மார்

நில வளத்தாலும், மலைவளத்தாலும் மிகுந்து சிறந்து விளங்குவது மலை நாடு ஆகும். தற்போது 'கேரளா' என வழங்கப்படுகிறது. பரசுராமர் என்ற முனிவர் தவம் செய்து, சிவபெருமானிடம் பெற்ற 'மழு' என்ற ஆயுதத்தால் உருவான பெருமையுடையது. சேரமன்னர்கள் பலர் ஆண்டிருந்த நாடு ஆகையால் இது 'சேரநாடு' என்ற பெயரும் உடையது. இத்திருநாட்டில் செங்குன்றூர் என்ற ஊரில், உழவுத் தொழிலில் சிறந்து ஓங்கிய வேளாளர் குலத்தில் **விறண்மிண்டர்** என்ற ஒரு மகான் திருஅவதாரம் செய்திருந்தார். இவர் சிவபெருமானின் திருவடிகளைச் சிந்தித்து அவர் மீதும், அவரின் அடியார்கள் மீதும், அளவிலாப் பற்றும், அன்பும் கொண்டு; வேறு எந்தப் பற்றிலும் பிடிப்பு இல்லாதவராய், தூய ஒழுக்கங்களுடன் வாழ்ந்து வந்தார். சிவத்தலங்கள் எங்கிருந்தாலும் அங்கு சென்று தரிசித்து; சிவனடியார்களே நடமாடும் சிவன் என்ற சிந்தையுடையவராய்; அவர்களின் மீது முதிர்ந்த அன்புடன், காணும் இடங்களில் எல்லாம் இருக்கும் அடியார்களின் திருக்கூட்டத்தை கண்டு, முதலில் வணங்கிய பிறகே, சிவபெருமானையே வணங்குவது என்ற கொள்கையை மேற்கொண்டு வாழ்ந்து வந்தார்.

ஒருமுறை விறண்மிண்டர் தலயாத்திரையாக பல தலங்களை கண்டு வணங்கிக் கொண்டு திருவாரூர் வந்து சேர்ந்தார். அங்கு சிலகாலம் தங்கி இருந்து தியாகராசப் பெருமானையும், தேவாசிரிய மண்டபத்தினில் இருக்கும் சிவனடியார்களையும் தரிசித்துக் கொண்டு, அவர்களுடன்

தங்கி இறைவனின் பெருமையைப் பேசியும், பாடியும் துதித்தபடி அங்கு குழுமி இருக்கும் அடியார்களுடன் கலந்து, அளவளாவி மகிழ்ந்திருப்பதிலே மனம் நிறைந்து இருந்து வந்தார். ஒரு நாள் வன்தொண்டனான சுந்தரர், தேவாசிரிய மண்டபத்தில் குழுமி இருக்கும் அடியார்களை வணங்காமல் ஒரு புறமாக ஒதுங்கியபடி கோயிலுக்குள் சென்றார். அது கண்ட விறண்மிண்டர் 'இவன் யார்' எனக் கேட்க; அவன் பெயர் சுந்தரன், இறைவனாள் தடுத்தாட்கொள்ளப்பட்டவர் என்று கூறினார். **'சிவனடியார்களைக் கண்டு வணங்காது செல்லும் இவனையும், இவனுக்கு அருள் செய்த சிவனையும் அடியார் கூட்டத்திலிருந்து விலக்குகிறேன்'** என்று அறிவித்தார். உண்மையில் சுந்தரரோ மிக்க சிறப்புடைய இந்த அடியார் கூட்டத்தில் தானும் ஒருவனாக ஆகும் நாள் என்னாளோ என்று எண்ணியபடி; ஒரு மரியாதை நிமித்தமாக அவர்களை விட்டு விலகிச் சென்றார்.

நம்பிஆரூரன் ஆன சுந்தரன் **'அடியார்' ஆகும் நாள் எந்நாளோ?** என உள்ளே நுழைய, ஆரூர்ப் பெருமான், **"அடியவனாய் ஆக்கும் நாள் இன்றே"** என அவர் எதிரே தோன்றினார். அவரைக் கண்டு, வணங்கி நின்ற சுந்தரனைப் பார்த்து, அப்பா! உன் பொருட்டு என்னையும் விலக்கி வைத்து விட்டார் விறண்மிண்டர்; ஆகையால் அவர்களைப் பணிந்து; போற்றி இரு என்று கூற; சுந்தரர் அடியார் பெருமையை எப்படிப் போற்றுவது என மயங்கினார். திருவாரூர்ப் பெருமான் "அடியார்களின் பெருமைக்கு அளவே இல்லை, அவர்கள் எனக்கு ஒப்பானவர்கள், ஒருமை உணர்வால் உலகத்தையே வெல்ல வல்லவர்கள்; பிறப்பு இறப்புகளைக் கடந்து நிற்பவர்கள். குற்றம் எதுவுமே இல்லாமல், அருமையான உயர்நிலையில் நின்று, அன்பினால் உண்மை இன்பம் நுகர்பவர்கள். இத்தகைய பெருமையுடைய அடியார்களை செந்தமிழ்ப் பாடல்களால் பாடுக" எனப் பணித்தார். "அடியார்கள் வரலாறு இன்னது என்றும், அவர்களின் தன்மை எப்படிப் பட்டதென்றும் அறியாதவனாகிய நான் அவர்களை எப்படி போற்றிப் பாடுவேன்; பாடும் இயல்பை நீதான் எனக்கு அருள வேண்டும்" எனத் துதித்து நின்றார் சுந்தரர்.

ஆரூர்ப் பெருமான், ஞானத்தால் அடியார்களின் வரலாறு அனைத்தையும் அவர் அறியுமாறு அருளியதோடு '**தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்**' என்று, முதல் அடியைப் பாடிக் கொடுத்துவிட்டு மறைய, தியாகேசன் திருவடிகளைச் சிந்தித்தபடி, தேவாசிரிய மண்டபத்தை அடைந்து; அடியார்களைப் பலமுறை பணிந்து; வணங்கி; அவர்களின் திருப்பெயர்களைக் கூறி, இவர் இவர்க்கு அடியேன் என்றும், அடியார்க்கு அடியேன் என்றும்; பரவிப் போற்றிப் பாடி வணங்கி நின்றார். வணங்கிய சுந்தரரைக் கண்ட விறண்மிண்டர் – '**இனி ஆரூரனும் ஆண்டவனும் அடியார்கள் கூட்டத்தைச் சேர்ந்தவர்களே**' எனக்கூறி தமது விலக்குக்கு விலக்களித்தார்.

சிவனடியார்களின் பெருமையை நிலைநாட்டி உலகறியச் செய்ததோடு, சைவநன்னெறியைப் பின்பற்றி பெருந்தொண்டுகள் பல செய்து வாழ்ந்து வரும் நாளில், எம்பெருமான் அவர் மீது தன் அருட்கருணைக் கண்கொண்டார். **வீரமும், உறுதியான மனமும் படைத்த விறண்மிண்டருக்கு சிவகணங்களுக்குத் தலைவராய் இருக்கும் தகுதியான கணநாதர் பதவி வழங்கினார்.** உலகமக்கள் அனைவரும் உய்வுபெற, சைவநன்னெறியைப் பின்பற்றி, எம் பெருமான் திருவடிகளை சிந்தித்து போற்றி வாழ்ந்த பலபல அடியார்களின் வரலாற்றினை உலகமக்கள் எல்லாம் அறிந்து கொள்ளுமாறு **திருத்தொண்டத் தொகை** எனும் திப்பிய பாடலை நம்பி ஆரூரனாகிய–நம் சுந்தரர் பாடுவதற்கு காரணமாய் விளங்கியவர் பெருமைக்கு உரியவர் விறண்மிண்டரே ஆவர். அவருக்கு இந்தப் பெருமை ஒன்றே போதும்; அவர் பாதங்களைப் பற்றி பணிந்து வணங்குவோம்.

இந்த அளவிலே சேக்கிழார் பெருமான் பெரிய புராணத்தில் இவர் வரலாற்றை நிறைவு செய்திருக்கிறார். திருவாரூர் கோவில் தல வரலாற்றில் மேலும் சில தகவல்கள் சொல்லப்பட்டுள்ளது. அன்பர்கள் அறிந்து கொள்வதற்காக, அந்தத் தகவல்களையும் இங்கு கொடுத்திருக்கிறேன்.

சிவனடியார் திருக்கூட்டத்தை வணங்காமல் சென்ற சுந்தரனும், அவனை வலிய ஆட்கொண்டருளிய சிவபெருமானும் அடியார்களுக்கு 'புறம்பு' – அதாவது 'விலக்கு; என்று அறிவித்த பின்னும் கூட, சுந்தரனுக்கு சிவன் காட்சி கொடுத்ததை அறிந்த நாயனார், இனிமேல் திருவாரூரில்

அடியெடுத்து வைப்பதில்லை எனச் சபதம் செய்துவிட்டு; மனைவியுடன் திருவாரூரின் வடக்கே உள்ள புத்தாற்றுக் கரையில் சென்று தங்கிவிடுகிறார். அவரைக் காண வருபவர்கள், திருவாரூர் மண்ணை மிதித்ததாகச் சொன்னாலே அவர்களின் காலை தனது மழுவால் வெட்டிவிடுவேன் என்றும் சபதம் செய்து வாழ்ந்து வந்தார்.

ஒருநாள் அவருக்கு அருள்தரத் திருவாரூர்ப் பெருமான் திருவருள் கொண்டார். அடியார் கோலம் தாங்கி அவர் இருக்கும் இடத்திற்குச் சென்றார். 'நாம் இருப்பது ஆரூர்' என்றார். தன் சபதப்படி அவர் காலை வெட்ட விறண்மிண்டர் எத்தனிக்க, வந்த அடியார் ஓட, அவரை விரட்டிக் கொண்டு போனார் விறண்மிண்டர். இருவரும் திருவாரூர் எல்லையை அடைந்தனர். சிவபெருமானாகிய அடியார் **'வந்தோம் இப்பால்'** என்றார். தன் சபதம் நிறைவேறாமல் போனது உணர்ந்த விறண்மிண்டர்; **மழுவால் திருவாரூர் மண்ணை மிதித்த தம் கால்களை வெட்டி வீழ்த்தினார்.** உடனே சிவபெருமான் அவருக்கு காட்சி தந்து அருளினார்; என்கிறது தலபுராணம்.

தற்போது திருவாரூர் கோவிலின் மதில் சுவரை ஒட்டி சுந்தரருக்கு சிவபெருமான் காட்சி கொடுத்த இடம் **'ஒட்டுத்தியாகேசர்கோவில்'** என்றும்; விறண்மிண்டர் பந்தல் அமைத்துத் தங்கியிருந்த இடம் **'ஆண்டிப்பந்தல்'** எனவும்; (ஆண்டி என்பது சிவனடியார்களைக் குறிக்கும் ஒரு வழக்குச் சொல்) சிவபெருமான் **'வந்தோம் இப்பால்'** என்று விறண்மிண்டருடன் வந்து நின்ற இடம், காலப்போக்கில் மருவி **'வெண்டாம் பாலை'** எனவும் இக்காலத்தில் வழங்கப்பட்டு வருகின்றது.

பெரிய புராணத்தில் சொல்லப்படும் வரலாறுகளின் உண்மைத் தன்மையினை உணர்ந்து கொள்வதற்காக இறைவன் கருணையினால் இது போன்ற ஆதாரங்கள் நாம் வாழும் இக்காலத்திலும் நமக்கு காணக் கிடக்கின்றன. சுந்தரரின் காலம் 9-ம் நூற்றாண்டு. 20-ம் நூற்றாண்டிலும்

சுந்தரரின் வரலாற்றுக்கான ஆதாரமாக இதுபோல மேலும் பலவற்றை அவ்வப்போது படித்து அறிவோம்.

இறைவன் தொடர்பான கருத்துக்களும், சிந்தனைகளும் அறிவுப் பூர்வமானது அல்ல.அவைகள் அனுபவப்பூர்வமானது. எனவே இறை கொள்கை மீதான நம்பிக்கை 'உணர்வு' சம்பந்தப்பட்டது ஆனதால் 'உணர்ச்சிமயமானது' ஆகிறது. இறைவன் உண்டு என்பதை, அனைத்து மதங்களும் ஏற்றுக் கொண்டுள்ளது. அவை வெவ்வேறு கோணங்களில் தம்தம் கடவுள்களை பற்றிப் பேசியுள்ளன. மறுக்க முடியாதபடி இறைவன் இருப்பதையும், அவன் இயக்கங்களையும், அவனுக்கும் உயிர்களுக்கும் உள்ள தொடர்பு பற்றியும், எந்த மதமும் விளக்கவில்லை. அறிவுப் பூர்வமாக விளக்குவது தமிழர்களின் 'சைவசமயம்' மட்டுமே. **இறைவன் தொடர்பான அனைத்துக் கேள்விகளுக்கும் சைவ சமயம் விடை கண்டுள்ளது;** அன்றியும் அறிவுப் பூர்வமான விளக்கமும் தரவல்லதாய் விளங்குகிறது.

உண்டு என நிறுவப்பட்ட இறைவனை ஒருபோதும் அறிவால் அறியமுடியாது. உணர்வால் மட்டுமே அறிய முடியும். இறையுணர்வு தரும் ஆனந்தத்தை அவரவரும் தாம்தாம் மட்டுமே அனுபவித்து அறியமுடியுமே இன்றி; சொல்லால் எழுத்தால் அடுத்தவருக்கு உணர்த்த முடியாது. ஒவ்வொருவரும் தானே முயன்று, பக்திசெய்து, பக்திசெய்து, பரவிப் போற்றினால் மட்டும் உணர்ந்து அறிய முடியும். மிகச் சுவையான பழம் ஒன்று உண்டேன் மிகமிக மதுரமாய் இருந்தது; என்பவரின் அனுபவத்தை; பிரிதொருவர் அதுபோன்ற பழத்தை உண்டால் மட்டும்தான் உணர முடியும். அது போன்றது தான் இறை அனுபவம். ஒவ்வொருவரும் தம் நெஞ்சில் தேக்கி வைத்துள்ள அன்பைக் கொண்டு, பக்தி காட்டுவதன் மூலம் மட்டுமே, இறை இன்பம் பெற முடியும்.

**மிக உயர்ந்த பக்தி 'தன்னை இழத்தல் ஆகும்.'** உலகியல் கூற்றுப்படி அதுவும் ஒரு 'பைத்திய நிலை'யே. தன்னைச் சுற்றி என்ன நிகழ்கிறது என்பதைக் கூட அறியாத

மனம் ஒன்றிய மனோமத்த நிலை அது. அவனைப் பற்றிய சிந்தனையின்றி தன்னைப் பற்றிய சிந்தனை சிறிதும் இல்லாத ஒரு மயக்கநிலை அதுவே நாயன்மார் கொண்டிருந்த இறைபக்தி நிலை. இன்ன தன்மையானது என்று சொல்ல முடியாத ஒரு ஆனந்த பரவச நிலையிலே தொண்டாற்றி, வாழ்ந்து, வரலாறு படைத்தனர். எழுதவோ, சொல்லவோ முடியாத ஒரு இன்ப உணர்வில் ஒன்றி, மேலும் மேலும் அதிலே மூழ்கித் திளைத்து, அதை விட்டுவிலக மனமின்றி அதற்காகத் தன் ஆருயிரையும் கூடக் கொடுத்து அந்த ஆனந்தத்தை நிரந்தரமாக்கிக் கொண்டனர். இப்படிப்பட்ட நிலையைத் தான் **'பேரின்ப நிலை'** என ஆன்றோர்களும், அருளாளர்களும் கூறுகின்றனர். இந்த இன்பம், ஆனந்தம் எப்படி இருக்கும் எனக் கேட்டவருக்கு அவர்கள் தந்த விளக்கத்தை அடியேன் சிற்றறிவுக்கு எட்டிய அளவில் விளக்க முயற்சிக்கிறேன்.

ஒரு ஆணும் பெண்ணும் (மணமாணவர்கள்) மனம் ஒன்றி சேர்கிறார்கள். அவர்களின் இரு உடல்களும் கூடி இன்பம் துய்க்கின்றனர். இந்த இன்பம் இருவருக்குமானது. இதை ஒருவர் கொடுக்க மற்றொருவர் பெறவில்லை. கொடுத்தவர் யார், பெற்றவர் யார் என்ற பேதம் இல்லை. மேலும் யார் கூடுதல் இன்பம் அநுபவித்தார் என்ற கேள்வியும் இல்லை. இந்த நிலையில் இவர்களுக்கு வேறு எந்த சிந்தனையும் இல்லை. அறிவும் வேலை செய்யவில்லை. **உணர்வுகள் மேலோங்கி இருக்கும் போது அறிவு வேலை செய்யாது என்பது அறிந்த நீதி.** உணர்ச்சியின் உச்சகட்டத்தில், அறிவினை இழந்து, இருவரும் ஒருவராய், ஒரே மாதிரியான இன்பத்தை நுகர்கின்றனர். இப்போது இவர்கள் பெறும் அல்லது பெற்ற இன்பம்; உடலுக்கா? அல்லது மனதிற்க்கா? எனப் பிரித்து அறிய முடியாததாகும். இருவரில் யார் ஒருவரின் ஈடுபாடு குறைவானதாய் இருந்தாலும், இந்த இன்பம் பூர்ணமாய் இருக்காது. இந்த இரண்டற்ற நிலையில் கண்ட இன்பம் சில மணித் துளிகள் மட்டுமே. உயிர்க்கு அனுபவம் ஆனது. சிறிய கால அளவில், உணர்ச்சி மேலோங்கிய நிலையில், தன்னை இழந்து பெற்ற இன்பத்தை, சிறிய அளவு

சுவைத்த இன்பத்தை அருளாளர்கள் **சிற்றின்பம்** என்று குறிப்பிட்டனர். **அறிந்த ஒன்றைச் சொல்லி அறியாத ஒன்றைப்பற்றி விளக்குவது அறிவுடையோர் செயலாகும்.** தன்னை இழந்து அடைந்த இன்பம் போன்று, உடலை கடந்து; தான், எனது என்ற நினைப்பெல்லாம் விட்டு, உயிர் பெரும் அந்த இன்பம், நீடித்த, நிலையான, நீங்காத இன்பமாய் இருக்கப் பெறுவது "பேரின்பம்" என்கின்றனர். அத்தகைய **பேரின்பத்தை இறைவனிடம் மட்டுமே பெறுவதற்கு முடியும்.** அதற்கு தன்னை இழப்பதே வழி. பெறுதற்கரிய அந்த 'பேரின்பம்' பெற்றவர்கள் பலர். அப்படிப் பெற்று உயர, பெருஞ் செயல் வீரராய், மேல்குடி, பிறந்தவராய் செல்வச் சிறப்புடையவராய், அறிஞராய் இருக்க வேண்டும் என்று இல்லை. மனம் ஒன்றி, தொண்டு செய்து, இறையருளைப் பெற்று உயர்ந்த பெருமக்களை, நமது சைவ சமயம் அடையாளம் காட்டியுள்ளது.

இத்தகைய பேரின்பத்தை **நால்வர் பெருமக்கள்** நான்கு வெவ்வேறு நிலைகளில் நின்று, பக்தி செய்து பெற்றதாகப் பெரியோர்கள் வகைப்படுத்திச் சொல்வர். அவை **சத்புத்ர மார்க்கம், சக மார்க்கம், தாச மார்க்கம், சதிபதி மார்க்கம்** என்று அவற்றைக் குறிப்பிடுகிறார்கள். அதாவது **சத்புத்ர மார்க்கம்-இது தந்தை மகன் உறவு.** இறைவனை தந்தையாகவும், தன்னை மகனாகவும் பாவித்து திருஞான சம்பந்தர் பேரருள் பெற்றதாகவும்; **சகமார்க்கம்-தோழமை உறவு,** இறைவனை தோழனாக, நண்பனாகப் பாவித்து பக்தி செய்து பேரருள் பெற்றவராகச் சுந்தரமூர்த்தி சுவாமிகளையும்; **தாசமார்க்கம்-ஆண்டான் அடிமை உறவு;** இறைவனை முதலாளியாக ஏற்றுப் பாவித்து அவருக்கு மெய்த் தொண்டு செய்து பேரருள் பெற்றவர் திருநாவுக்கரசு சுவாமிகள் என்றும்; நிறைவாக **சதிபதி மார்க்கம், தலைவன் தலைவி உறவு** கொண்டு இறைவனை நாயகனாகவும் (கணவனாகவும்) தன்னை நாயகியாகவும் பாவித்து, அவனை அடைய வேண்டி பக்தி செய்து பரவிப் போற்றி, பேரருள் பெற்றவராக திருவாதவூரடிகளான மாணிக்கவாசகப் பெருமானையும் குறிப்பிட்டுக் காட்டி விளக்கியுள்ளார்கள்.

நால்வர் பெருமக்களின் வரலாற்றையும் அவர்கள் அருளிய திருப்பாடல்களையும் ஊன்றிப் படித்தால்; நால்வரும் மேலே சொன்னவாறு இறைவனிடம் அன்புகொண்டு, பக்திசெய்து, பரவிப் போற்றிப் பணிந்து பரமனருள் பெற்றவர்களே என்பதை நாமும் கூட உணர்ந்தறிந்து இன்புறலாம்.

நாயன்மார் காட்டிய நல்வழியில் நாமும் வாழ முயற்சிப்போம். மெல்ல மெல்ல ஒரு ஆமை மலை ஏறுவது போலத் தொய்வின்றி தொண்டுசெய்து **"மீண்டும் பிறந்தால் உனை மறவாத நிலை வேண்டும்"** என்று மன்றாடிக் கொண்டே மாண்டால், நிச்சயம் ஏதேனும் ஒரு பிறப்பில் மீண்டும் பிறவாப் 'பேரின்பம்' பெறலாம் என்று அறை கூவும் 'சைவ சமயம்' சொல்லும் சத்திய வாக்கை நம்பி இருப்போம். நலம் பெறுவோம்.


**அடுத்த இதழில் அல்லி யென் முல்லையந்தார் அமர்நீதி நாயன்மார் பற்றி சிந்திப்போம்.**


## காப்பு கட்டு விழா

சிங்கம்புணரி, பாரதிநகரில் வசிக்கும் கழுகக்கூருடையார் திரு. R. சேகர் செட்டியார் – S. தேன்மொழி ஆச்சி இவர்களின் பேத்தியும், திரு S. நாகராஜ் – உமா தம்பதியரின் மகளுக்கு நாகஸ்ரீ என்று பெயர் சூட்டும் விழாவும், பாசி போடும் விழாவும் 13–06–2021 அன்று சிங்கம்புணரி நாடார்பேட்டையில் உள்ள சம்பந்தி திரு. M. சேவுகமூர்த்தி – மீனாள் ஆச்சி தம்பதியர் இல்லத்தில், கொரனா காரணத்தினால் மிகவும் எளிமையாக நடைபெற்றன.

தகவல்: திரு ந. நாகராஜ், சிங்கம்புணரி

வாழ்க்கையில் ஜெயிக்கணும்னா அடுத்து என்ன பண்ணாலாம்னு யோசிக்கனுமே தவிர...

அடுத்தவன் என்ன பண்றான் என்று பார்க்கக் கூடாது.

## ஸ்ரீ மங்கைபாகர் தேனம்மை திருமண தகவல் மையம், கோவை

இலவச சேவை-கட்டணம் இல்லை. பதிவிடுங்கள்

சமூகப் பெருமக்களே! பெற்றோர்களே!

மணமகன்-மணமகள் தேவைக்கு உரிய விவரத்துடன் தபால் அனுப்புங்கள். வரிசைப்படி நம்பர் பதிவு செய்து பதிவேட்டில் விபரம் எழுதி விரைவில் திருமணம் கைகூட வழி காண்பிக்கிறோம். 18-07-2006-இல் தொடங்கிய இச்சேவையில் பதிவானது 495. இணைந்த தம்பதிகள் 374. காத்து இருப்பது ஆண் - 102, பெண் - 19, ஆக 121. பெண் பதிவு மிக மிக குறைவு. பெண்வீட்டார்கள் முன் வந்து பதிவு கொடுத்தால் சமூக இனம் பெருக சமூகம் வளரும். பெண் வீட்டார்கள் ஒத்துழைப்பு கொடுக்க வேண்டுகிறோம்.


திரு. P.L. ரெங்கசாமி

பி.எல்.ஆர். திருமுருகன் ஸ்டோர்ஸ்
நெ. 18, எம்.கே.ஜி. லே அவுட்
ITI பின்புறம் GN மில்
கோயமுத்தூர் - 641 029.
செல் : 99523 49855

குறிப்பு : நேரில் வந்து கலந்து பேசினால் உடன் திருமணம் கைகூட வாய்ப்பு அதிகம்.

# 2019-2020ல் பெருந்தொகை வழங்கிய நன்கொடையாளர்கள் 31.03.2020

**மாபெருங்கொடை வள்ளல்கள் :**

1. திரு. **A.P. ஸேதுராமன் – விஜயலட்சுமி,** கோவை.
2. திரு. **செல்வன் R.M. செந்தில்,** பொன்.புதுப்பட்டி.
3. திரு. **சொ. இராமநாதன் – சிவசக்தி** (செம்பதி) துபாய்.
4. திரு. **இராம. சூரியா சொக்கலிங்கம், – மகாலட்சுமி**
   திரு. **இராம. ஆதித்யா சொக்கலிங்கம்,** துபாய் (செம்பதி)

**பெருங்கொடை வள்ளல்கள் :**

1. திரு. **சொ. வைத்திலிங்கம் செட்டியார் – பாப்பா ஆச்சி,** மதுரை.

**கொடை வள்ளல்கள் :**

1. திருமதி. **இராம. லதா அவர்கள்,** நத்தம்.
2. திரு. **து. அரவிந்த் குமார் B.E., M.S., – பத்மா B.E.,** சென்னை.
3. தெய்வத்திரு. **STKR. சக்திவேல் – ராஜலெட்சுமி,** பொன்னமராவதி.

**வள்ளல்கள் :**

1. திரு. **M. பாலகிருஷ்ணன் – பானுமதி ஆச்சி,** சிங்கம்புணரி.
2. திரு. **செ. ஆசை அலங்காரம் குடும்பத்தார்,** சிறுகுடி.
3. திரு. **M.S. முருகப்பன்,** பொன்னமராவதி.
4. திரு. **சொ. முருகேசன் – கவிதா,** சிவகாசி.
5. திரு. **மு. சதாசிவம் – சக்தீஸ்வரி,** தஞ்சாவூர்.
6. திரு. **A. முருகன் – செல்வமணி,** நீடாமங்கலம்.
7. திரு. **TMRS. சிவக்குமார் – அருணோதயம்,** கோவை.

**6-12 மாணவர்களுக்கு உதவித்தொகை வழங்கும் நன்கொடையாளர்கள்**

1. **சிங்கம்புணரி மீனாட்சி நல்லதம்பி வலச்சேரிப்பட்டி தெய்வானை வள்ளியப்பன்** நினைவாக அவந பொதுநலச்சங்கம், பிரான்மலை.
2. தெய்வத்திரு. **மு.அ. பரமசிவம் செட்டியார் – அங்கம்மாள் ஆச்சி** குடும்பத்தார், பொன்.புதுப்பட்டி.
3. திரு. **சொ. வைத்திலிங்கம் செட்டியார் – பாப்பா ஆச்சி** குடும்பத்தார், மதுரை.
4. திரு. **தே.மா. பழனிச்சாமி செட்டியார் – பழ. சரஸ்வதி ஆச்சி** குடும்பத்தார், பொன்.புதுப்பட்டி.
5. தெய்வத்திரு. **தீ.பழ. பொன்னுச்சாமி செட்டியார் – அன்னமயிலி ஆச்சி** நினைவாக **A.P. ஸேதுராமன் – விஜயலட்சுமி,** கோவை.

**தங்கப்பதக்கம் வழங்கும் நன்கொடையாளர்கள் : 10ஆம் வகுப்பு**

1. முதல் கல்விக்காவலர் **தெய்வத்திரு. வெ.ராம. சுப்பிரமணியன் செட்டியார் – அன்னபூரணி ஆச்சி** குடும்பத்தினர், சென்னை.
2. **அருவியூர் வடக்குவளவு நகரத்தார் சங்கம்,** கோவை.
3. திரு. **ஆ. ஆறுமுகம் – சாந்தி,** கோவை.

**12ஆம் வகுப்பு**

4. திரு. **அரு.சோம. சண்முகநாதன் – சிவகாமி,** தூத்துக்குடி.
5. திரு. **செ. இளவரசன் & திரு. நே. சரவணன்,** சென்னை.

# சரஸ்வதி நதி பூமிக்குள் புதைந்த வரலாறு

புண்ணிய நதிகளான கங்கை, யமுனை, சரஸ்வதி பற்றி கேள்விப்பட்டிருப்போம். ஆனால் கங்கையையும், யமுனையையும் நேரடியாக பார்க்க முடியும். ஆனால் சரஸ்வதி நதி பூமிக்குள் புதைந்து விடுகிறாள்.

உத்தரகண்ட் மாநிலத்தின் பத்ரிநாத்துக்கு அடுத்தள்ள **இந்தியாவின் கடைசி கிராமமான "மாணா"** கிராமத்துக்கு அருகில் தான் சரஸ்வதி நதி பூமிக்குள் மறைந்து போகிறது. இங்குதான் வியாச முனிவர் சொல்லச் சொல்ல பிள்ளையார் மகாபாரதம் எழுதினார். சரஸ்வதி பாயும் சத்தத்தில் வியாசர் சொல்வது பிள்ளையாருக்கு சரியாகக் கேட்காததினால் கோபமடைந்த வியாசர் சரஸ்வதியை பூமிக்குள் மறைந்து போகும்படி சாபமிட்டார் என்பது வரலாறு. சரஸ்வதி நதி பூமிக்குள் மறையும் விந்தையை, நாம் இன்றும் நேரடியாக பார்க்க முடியும். இதை நாங்களும் நேரில் சென்று பார்த்து வந்தோம். **தகவல் : திரு. வை. முத்துராமன், பொன்னமராவதி.**



# ஆறுவகைச் சுவை அறிவோம்



**சுவைகள் ஆறு என்பதை நாம் அனைவரும் அறிவோம் ஒவ்வொரு சுவைகளின் குணாதிசயங்களையும், அந்த சுவையுடைய உணவுப் பொருள்களையும் என்னவென்று தெரிந்து கொள்வோம்.**

**காரம் :** உடலுக்கு உஷ்ணத்தைக் கூட்டும். உணர்ச்சிகளைக் கூட்டவும், குறைக்கவும் செய்யும்.

**காரச்சுவை உணவுப் பொருட்கள் :** வெங்காயம், மிளகாய், இஞ்சி, பூண்டு, மிளகு, கடுகு.

**கசப்பு :** உடலிலுள்ள தேவையில்லாத கிருமிகளை அழித்து உடம்பிற்கு சக்தியைக் கூட்டும். சளியைக் கட்டுப்படுத்தும்.

**கசப்பு சுவை உணவுப் பொருட்கள் :** பாகற்காய், சுண்டக்காய், கத்தரிக்காய், வெந்தயம், பூண்டு, எள், வேப்பம்பூ, ஓமம்.

**இனிப்பு :** உடம்பு தசையை வளர்க்கும் தன்மை வாய்ந்தது. வாதத்தைக் கூட்டும்.

**இனிப்புசுவை உணவுப் பொருட்கள்:** பழவகைகள், உருளை, காரட் போன்ற கிழங்கு வகைகள், அரிசி, கோதுமை போன்ற தானியங்கள் மற்றும் கரும்பு போன்ற தண்டு வகைத் தாவரங்கள்.

**புளிப்பு :** இரத்தக் குழாயின் அழுக்கை நீக்கவல்லது. வாதத்தைக் கூட்டும்.

**புளிப்பு சுவை உணவுப் பொருட்கள் :** எலுமிச்சை, புளிச்ச கீரை, இட்லி, தோசை, அரிசி, தக்காளி, புளி, மாங்காய், தயிர், மோர், நார்த்தங்காய்.

**துவர்ப்பு :** இரத்தம் வெளியேறாது தடுக்க வல்லது. இரத்தம் உறைவதைக் கூட்டும் தன்மையுள்ளது.

**துவர்ப்பு சுவை உணவு பொருட்கள் :** வாழைக்காய், மாதுளை, மாவடு, மஞ்சள், அவரை, அத்திக்காய்.

**உப்பு :** ஞாபகசக்தியைக் கூட்டும். கூடினால் உடம்பில் வீக்கத்தை ஏற்படுத்தும்.

**உப்புசுவை உணவுப்பொருட்கள் :** கீரைத்தண்டு, முள்ளங்கி, வாழைத்தண்டு, பூசணிக்காய், சுரைக்காய், பீர்க்கங்காய்.

**நோயின்றி வாழவும், மனம் அமைதி பெறவும், தேவையான சுவை அறிந்து அச்சுவையுள்ள உணவுகளை உண்டு வாழ்வோம்.**

**- திருமதி. ஆனந்த செல்வம், நங்கநல்லூர், சென்னை-61**

# வா.புதூர் திரு மு. மயி. முத்துச்சாமி செட்டியார்–தெய்வத்திரு. மு. தேனம்மாள் ஆச்சி

## இல்லத் திருமண விழா




வரவேற்பு பதாகைகள்



நிச்சயதார்த்த சீர்




நிச்சயதார்த்தம்



நிச்சயதார்த்த பட்டு கொண்டு வருதல்



நிச்சயதார்த்த பட்டு கொடுத்தல்



T.MR. சண்முகம் செட்டியார் ஆசீர்வாதம்



முகூர்த்த பட்டு கொடுத்தல்



மாப்பிள்ளை அழைப்பு



மாப்பிள்ளை பிள்ளையார் கோயில் வழிபாடு

## வா.புதூர் திரு மு. மயி. முத்துச்சாமி செட்டியார்–தெய்வத்திரு. மு. தேனம்மாள் ஆச்சி

# இல்லத் திருமண விழா



மணமகனின் தாய்மாமன் குடும்பத்தார்



மணமகன் மணமேடைக்கு அழைத்தல்



மணமகனுக்கு ஆரத்தி எடுத்தல்



மணமகள் மணமேடைக்கு அழைத்தல்



தாய்மாமன்கள் காப்புநூல் கட்டுதல்



மணமகளின் தாய்மாமன் ஆசி வழங்குதல்



மணமகனின் தாய்மாமன் ஆசி வழங்குதல்



மணமகளின் தாய்மாமன் குடும்பத்தார்



மணமகன் வரவேற்பு

# வா.புதூர் திரு மு. மயி. முத்துச்சாமி செட்டியார்–தெய்வத்திரு. மு. தேனம்மாள் ஆச்சி

## இல்லத் திருமண விழா



திருப்பூட்டு நிகழ்வில் ஸ்ரீராஜன் சுவாமி



திருப்பூட்டு நிகழ்வு



இசைவு பொன்னோலை பெறுதல்



பெற்றோர்கள் மணமிடுதல்



மணமக்களுக்கு ஸ்ரீராஜன் சுவாமி ஆசீர்வாதம்



மணமக்கள் பெற்றோரிடம் ஆசி பெறுதல்



குடி அழைத்தல்



வீடு அறிதல்

# வா.புதூர் திரு மு. மயி. முத்துச்சாமி செட்டியார்–தெய்வத்திரு. மு. தேனம்மாள் ஆச்சி

## இல்லத் திருமண விழா



அய்யப்பா திரு. மா. ராமசாமி ஆசீர்வாதம்



T.MR. சண்முகம் செட்டியார் ஸ்ரீராஜன் சுவாமியிடம் ஆசீர்வாதம்



திரு. நா. சீனிவாசன், ஆசிரியர், சிவகங்கை.



மணமகன் வீட்டார் ஸ்ரீராஜன் சுவாமியுடன்



மணமகள் வீட்டார் ஸ்ரீராஜன் சுவாமியுடன்



மணமகளின் பெரியப்பா, சித்தப்பா



அம்முணி திருமதி. சே. சாவித்திரி ஆச்சி ஆசீர்வாதம்



[illegible]
ஸ்ரீராஜன் சுவாமிகளின் வாழ்த்துமடல்

# வீடு சொர்க்கம் ஆகும் எப்போதும்!

**எண்ணங்கள்** வெவ்வேறாக இருந்தாலும், ஒருவர் எண்ணத்திற்கு ஒருவர் மதிப்பு தந்து சொல்வதை காதில் வாங்க வேண்டும். கணவன் மட்டுமே வேலைக்குச் செல்லும் வீட்டில் தன்னால் தான் குடும்ப பொருளாதாரம் இயங்குகிறது என்பதை எப்போதும் கணவன் வார்த்தைகளில் வெளிப்படுத்தக் கூடாது. மனைவியும் வேலைக்கு செல்லும் வீட்டில் நானும் தான் வேலைக்குப் போறேன் என்ற வார்த்தையை மனைவி அடிக்கடி சொல்லக் கூடாது. இவரிடம்/இவளிடம் இதைச் சொன்னால் பெரிய பூகம்பமே வெடிக்குமோ என்ற பயத்தை ஒரு போதும் மனைவிக்கு கணவனும், கணவனுக்கு மனைவியும் தரக்கூடாது. **பொய்யின் ஆரம்பமே பயம் தான்.**

எவ்வளவு பெரிய சண்டை என்றாலும் உங்கள் இருவர் பற்றி மட்டும் தான் பேச வேண்டும். கணவன் குடும்பத்தாரைப் பற்றி மனைவியும், மனைவியின் குடும்பத்தாரைப் பற்றி கணவனும் பேசவே கூடாது. அப்படி பேசுவது தான் தவறுகளில் மிகப்பெரிய தவறு. மனைவியை தன்னில் ஒரு பாதியாக பார்க்காவிட்டாலும் வேலைக்காரியாய் பார்க்காமல் இருப்பது கணவனுக்கு அழகு.

கணவனை ஏற்றது போல் அவர்கள் குடும்பத்தையும் முழுமனதாய் மனைவி ஏற்க வேண்டும் (இப்படி வாழ்ந்தால் முதியோர் இல்லங்கள் நிச்சயம் குறையும்). கணவன் நண்பர்களுடன் ஊர் சுற்றி விட்டு நேரம் கழித்து வீடு வருவது, மனைவியை மட்டும் வீட்டுக்குள்ளே ஆயுள் கைதி ஆக்குவது, அவளை வெளியுலகம் அறியவிடாமல் செய்வது தவறு. படிப்பறிவில்லா பெண்களை சில ஆண்கள் இப்படித் தான் நடத்துகின்றனர். ஆனால் தற்பொழுது இந்த நிலை இல்லை.

கணவனும், மனைவியும் தனித் தனியே வெளியில் சென்றால் நேரமாய் விடு திரும்ப வேண்டும். அப்படி நியாயமான காரணத்திற்காக தாமதம் ஏற்பட்டால் ஒருவர்

சொல்லும் காரணத்தை மற்றவரும் நம்பி ஏற்றுக் கொள்ள வேண்டும்.

அம்மாவின் சமையல் பக்குவத்தை எதிர்பார்த்து மனைவியின் சமையலை சாப்பிட்டு, ஏமாற்றம் என்றதும் அவளை திட்டக் கூடாது. அப்படி திட்டுவேன் தான் என்றால் அதற்கு முன் ஒன்றை யோசியுங்கள். திருமணம் ஆன புதிதில் உங்க அம்மாவும் இப்படித் தான் உங்க அப்பாவிடம் திட்டு வாங்கி இருப்பார்கள். சமையலுக்காக பக்குவம் பார்த்ததும் வந்து விடக்கூடியதல்ல. பல வருட அனுபவத்தில் வருவது.

**நரகமாய் இருக்கும் வீடு சொர்க்கம் ஆவதும், சொர்க்கமாய் இருந்த வீடு நரகம் ஆவதும் கணவன் மனைவி நடந்து கொள்ளும் விதத்தில் தான் இருக்கிறது என்பதை சொல்லவும் வேண்டுமோ?**

குரல்வாசகர்களே, நாமும் ஒரு மாற்றத்திற்காக சுமார் ஒரு மாத காலம் மேற்கண்டவாறு வாழ்ந்து பார்ப்போம்... வீடு சொர்க்கமாவதை உணர்வது மட்டுமின்றி தொடர்ந்து அது போன்று வாழவும் ஆசைப்படுவீர்கள்.

**- வாழ்த்துக்களுடன் சுப. செல்வம் குரல் ஆசிரியர்**

# காகங்கள் ஒரு பார்வை

**காகம்** ஒரு விநோத பறவை. நம் வாழ்வில் நிகழ்கிற மாயமான, மர்மமான நிகழ்வுகளுக்கு காகத்தைத் தொடர்பு படுத்துவதுண்டு. நம் அன்றாட வாழ்வியலுடன் தொடர்புடைய பறவை காகம். மனிதர்களின் உணர்வுகளை நன்றாக புரிந்திருக்கும் ஒரு பறவையாக காகத்தைச் சுட்டி காட்டுகிறார்கள். கனவில் வந்தால் நிஜத்தில் வந்தால் காக்கை நமக்கு உணர்த்தும் ஆன்மீக ரீதியாக மற்றும் நிமித்த ரீதியான செய்திகள் பலப்பல. சாஸ்திர ரீதியாக பார்த்தால் காகம் நல்ல அதிர்வுகள் மற்றும் மோசமான அதிர்வுகள் இரண்டின் குறியீடாகவும் பார்க்கப்படுகிறது. நம் பண்டைய கலாச்சாரத்தில் காகம் என்பது மனித ஆன்மாவை வழிநடத்தும் பறவையாக பார்க்கப்படுகிறது. ஆனால் இன்றைய நவீன காலத்தில் இதற்கான வேறு அர்த்தம் கற்பிக்கப்படுகிறது.

ஒருவருடைய வாழ்வில் காக்கையின் வருகை என்பது புதிய மாற்றத்திற்கான அடையாளமாக கருதப்படுகிறது. மேலும் காகம் கரைந்தால் உறவினர்கள் வீட்டிற்கு வருவார்கள் என்று சொல்வதுண்டு. இதற்கான அறிவியல் காரணம் காகம் மிக உயரமான இடத்தில் கூடு கட்டும். எனில் அதற்கு மிக விரிவான பார்வையிருக்கும். அதனாலேயே வீட்டிற்கு வருபவர்கள் குறித்து அதனால் உணர முடிகிறது. காக்கை வீட்டின் ஜன்னல் அல்லது கதவு அருகே அமர்ந்திருந்தால் நம் அருகில் ஏதோவொரு மரணம் சம்பவிக்கலாம் என்றும் சொல்லப்படுகிறது.

காக்கைக்கு இருக்கும் மற்றொரு குணம் அச்சமின்மை. எதைக் கண்டும் அஞ்சாது. எனவே காக்கையை நல்ல அதிர்வுள்ள பறவையாக நாம் கருதலாம். இதிலிருக்கும் மற்றொரு முக்கியமான விஷயம் இறந்தவர்களை எண்ணி காக்கைக்கு உணவு வைப்பது; இது எதனால் எனில் காக்கைக்கு தெய்வீகத் தன்மை உண்டு. அதனால் ஆன்மாவை உணர முடியும். இறந்த பித்ருக்களுக்கு நிறைவேறாத ஆசை ஆன்மாவிடமிருந்து காக்கைக்கு கிடைக்கும் என்பது நம்பிக்கை. காகம் உணவை உண்டு விட்டால், இறந்தவர்கள் நிறைவுடன் இருக்கிறார்கள் என்பது நம்பிக்கை. இதன் மூலம் பித்ருக்களின் ஆசீர்வாதத்தை நாம் பெற முடியும் என்பது நமது வாழ்க்கைப் பயணம் மேலும் இனிதாக அமைவதற்காக என்பதை உணர்வோம்.

**- சுப. செல்வம், குரல் ஆசிரியர்.**

# பாராட்டக் கற்றுக் கொள்ளுங்கள்

**புகழ்ச்சி** ஒரு மந்திரம். புகழ்ச்சிக்கு அடிமையாகாதவர் புவியில் யாருமில்லை. ஒருவரை ஆத்மார்த்தமாகப் பாராட்டும்போது அவரின் அகமும் குளிரும். முகமும் மலரும். காலையில் கணவர் வேலைக்குச் செல்லக் கிளம்பும் போது வழியனுப்ப ஆசையாக வந்து நிற்கும் மனைவியைப் பார்த்து "உன் முகத்தைப் பார்த்துட்டுப் போனா எல்லாக் காரியமும் சக்ஸஸ்தான், உன்னைப் பார்த்துக் கிட்டே இருந்தா எனக்கு வேலைக்கு நேரமாகும்" என்று கூறும் கணவர் அசாதாரண ரகம். இவர் புகழ்ச்சி என்ற மந்திரத்தின் தந்திரம் தெரிந்தவர். இவர் தொட்டது துலங்கும். பாராட்டில் உண்மையும், கனிவும் இருக்க வேண்டும். பாராட்டும் போது முகஸ்துதியோ, போலித்தனமோ இருக்கக் கூடாது.

குழந்தைகள் செய்யும் சிறிய நல்ல காரியங்களைக் கூடப் புகழ்ந்து பாருங்கள். அவர்கள் நடவடிக்கைகளில் நல்ல முன்னேற்றம் தெரியும். எப்பொழுதும் தொட்டதெற்கெல்லாம் பாராட்டிக் கொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை. அதற்காகப் பாராட்ட நேரம், காலம் பார்க்க வேண்டிய அவசியமும் இல்லை. "எங்க சந்தோஷ் ரொம்ப சமத்து... நல்லாப் படிக்கிறான்... ஆத்துலே என்ன வேலை சொன்னாலும் ஒரு சின்ன முக்சுளிவு கூடப் பண்ணாம செய்வான்.." என்று ஒரு தாய் தன் வீட்டிற்கு வந்திருக்கும் விருந்தினரிடம் தன் மகனைப் புகழ்கிறாள். "சந்தோஷ் மாமா- மாமி வந்திருக்கா, பக்கத்துக் கடையில் போய் கூல்டிரிங்ஸ் வாங்கிட்டு வா" என்ற வார்த்தையை முடிக்கும் முன் சந்தோஷ் சந்தோஷமாகக் கூல்டிரிங்ஸுடன் வந்து நிற்கிறான்.

**பாராட்டு என்பது பாராட்டுபவருக்கும் மகிழ்ச்சி! பாராட்டப்படுபவருக்கும் மகிழ்ச்சி!** புகழ்வதில் தயக்கமே இருக்கக் கூடாது. பாராட்டுபவர் இனிமையான சொற்களையே செலவழிக்க வேண்டும். குறைகளாகத் தோன்றும்.

கசப்புகளைக் கூட பாராட்டு என்ற தேனில் குழைத்துத் தர வேண்டும். நம்மில் எத்தனை பேர் பேருந்து ஓட்டுனர்களுக்கும், ஆட்டோ ஓட்டுபவர்களுக்கும் நன்றி கூறுகிறோம். அவ்வாறு அவர்களுக்கு நன்றி கூறி அவர்கள் திறமைகளைப் பாராட்டும் போது களைப்பின்றி இன்னும் உற்சாகமாகவும், சிறப்பாகவும் அவர்கள் தங்கள் பணிகளைச் செய்ய முடியுமே.

ஒருவரை உண்மையாகப் புகழும்போது அவர் மனதில் நீங்கள் ஒரு கோபுரத்தில் அமர்கிறீர்கள். அழகு-அன்பு-படிப்பு-பதவி-திறமை இப்படி ஒருவரிடம் இருக்கும் நல்ல குணங்களை அறிந்து உண்மையாகப் புகழ்வதன் மூலம் உங்களை நீங்கள் உயர்த்திக் கொள்கிறீர்கள். அது மட்டுமில்லாமல் நீங்கள் புகழப்பட்டவரால் மனதில் நினைத்தக் காரியங்களையும் சாதித்துக் கொள்கிறீர்கள்.

தினந்தோறும் பூ வாங்கும் பூக்காரியிடம், “அது என்னமோ தெரியலை அம்மா... உன்னிடம் பூ வாங்கி சாமிக்குப் போட்டால் தான் மங்களகரமா இருக்கு... உனக்கு அப்படி ஒரு முகராசி” என்று சொல்லி பூக்காரியின் பூ முகம் மலர்வதை ரசித்துப் பாருங்கள்.

முன் வந்து நின்றால் தான் முகம் காட்டும் கண்ணாடி. மனம் நிறைய நேசத்தையும், பாசத்தையும் வைத்துக் கொண்டு வெளித்தோற்றத்திலே எரிந்து விழுந்து கெட்ட பெயர் சம்பாதிக்கும் மக்கள் எத்தனை எத்தனை பேர்? மனதில் உள்ள அன்பை ஒளிவு மறைவில்லாமல் பாராட்டு என்ற அஸ்திரத்தைப் பயன்படுத்தி வெளிக்கொணருங்கள். வெற்றி நிச்சயம். **“மூர்த்தி சிறிதானாலும் கீர்த்தி பெரிது” என்பதற்கேற்ப பாராட்டுவது என்பது ஒரு சிறிய செயல்தான்.** ஆனால் அது தரும் பலனோ அபரிதமானது. பாராட்டு, விழுபவனை எழ வைக்கும். பாராட்டு என்ற சூத்திரம் உற்சாகத்தின் உறைவிடம். வெற்றிக்கான படிக்கட்டு.

**பாராட்டக் கற்றுக் கொள்ளுங்கள். உலகம் உங்கள் வசப்படும்.**

**- திருமதி. விசாலா இளவரசன் நங்கநல்லூர்.**

# கல்விக் காவலர்கள்

1. **மே 2004 : முதல் கல்விக் காவலர், ஆமலூருடையார், தெய்வத்திரு. வெ.ராம. சுப்பிரமணியன் செட்டியார் – அன்னபூரணி ஆச்சி அவர்கள், அம்மன் குறிச்சி, சென்னை.**
2. ஜூலை 2004 : மேலூருடையார், **திரு. தே.மா. பழனிச்சாமி செட்டியார் – திருமதி. சரஸ்வதி ஆச்சி** அவர்கள், பொன்னமராவதி.
3. செப்டம்பர் 2006 : கழனிவாசலூருடையார் **திரு.நா. சுப்பிரமணியன்** BSc., CAIIB **திருமதி. தமிழ்ச்செல்வி** B.Lit., அவர்கள், கல்லம்பட்டி, சென்னை.
4. **மார்ச் 2007 : நாவலூருடையார், திரு. ச. கனகசபை B.E., மனோரஞ்சிதம்** அவர்கள், உலகம்பட்டி, திருச்சி.
5. ஜூலை 2007 : கழூகக்கூருடையார், **தெய்வத்திரு. இராம. வேலாயுதம் செட்டியார் – பார்வதி ஆச்சி** அவர்கள், படமிஞ்சி, சென்னை.
6. நவம்பர் 2007 : கழனிவாசலூருடையார், **தெய்வத்திரு. மு.சி.கி. நாராயணன் செட்டியார் – இராஜமாணிக்கம் ஆச்சி** அவர்கள்,கல்லம்பட்டி.
7. மே 2010 : சிக்கலூருடையார், **தெய்வத்திரு. நல்லாசிரியர் மெ. இளங்கோ – சாவித்திரி** அவர்கள். வா.புதூர்.
8. ஜூலை 2011 : அரும்பாக்கிளையார். திரு. **M.M. தியாகராஜன் B.Sc., தெய்வத் திருமதி. ஜோதிமணி** அவர்கள் புழுதிப்பட்டி. மதுரை.
9. ஜனவரி 2012 : பொன்னமராவதி பூண்டிலூருடையார். தெய்வத்திரு. மா. தங்கராஜன் – அழகுமீனாள் அவர்கள், புழுதிபட்டி பெங்களூரு.
10. மார்ச் 2012 : கழூகக்கூருடையார். **தெய்வத்திரு. மு.ஆ. இராமசாமி செட்டியார். தெய்வத்திருமதி. இராஜாமணி ஆச்சி,** சொக்கம்பட்டி.
11. மே 2012 : நாவலூருடையார், **திரு. ச. சொக்கலிங்கம் செட்டியார் – தெய்வத்திருமதி. தனபாக்கியம் ஆச்சி** அவர்கள் உலகம்பட்டி.
12. **ஜூலை 2012 : கழனிவாசலூருடையார். திரு. P.L. இராமஜெயம், பத்மாவதி அவர்கள், பொன்னமராவதி.**
13. செப்படம்பர் 2012 : கழூகக்கூருடையார். **தெய்வத்திரு.** M.S.M. **மாணிக்கம் செட்டியார் – சரஸ்வதி ஆச்சி** அவர்கள், பொன்னமராவதி.
14. **நவம்பர் 2012 : பணப்பாக்குமூருடையார். தெய்வத்திரு. கு. சொக்கலிங்கம் செட்டியார் - சொ. தேனம்மாள் ஆச்சி, செம்பூதி.**
15. மார்ச் 2013 - அரும்பாக்கிளையார், **தெய்வத்திரு. இராம. கதிரேசன் செட்டியார். திருமதி.முத்துலெட்சுமி ஆச்சி,** புழுதிப்பட்டி.
16. **மே 2013 : மேலூருடையார். தெய்வத்திரு. தே.மா. நாராயணன் செட்டியார் – சண்முகவள்ளி ஆச்சி,** பொன்னமராவதி.
17. ஜூலை 2013 : பூதமங்கலமூருடையார். **திரு. ச. இராமலிங்கம் – இராஜமாணிக்கம்,** அயனாவரம். சென்னை.
18. நவம்பர் 2013 : ஆமலூருடையார். **திரு. வெ.இராம.சுப. துரைராசு செட்டியார் – மீனாட்சி ஆச்சி,** அம்மன்குறிச்சி, சென்னை

19. ஜனவரி 2014 : நாவலூருடையார். **தெய்வத்திரு. அரு. வேலாயுதம் செட்டியார் – சம்பூர்ணம் ஆச்சி,** பொய்யாமணிப்பட்டி.

**20. மார்ச் 2014 : பூதமங்கலமுருடையார். திரு. R. பரமசிவம் B.E., தெய்வத்திருமதி. சிவகாம சுந்தரி, பொன்னமராவதி, சென்னை.**

**21. ஜனவரி 2015 : பூதமங்கலமுருடையார். திரு. அ.சொ. சண்முகம் செட்டியார் – ஜெயபாரதி ஆச்சி, அம்மன்குறிச்சி, திருச்சி.**

**22. மார்ச் 2015 : அரும்பாக்கிளையார். திரு. A.P. ஜெயபால் – புவனேஸ்வரி, பொன்னமராவதி, ஈராடு.**

23. ஏப்ரல் 2015 : கழுகக்கூருடையார், **தெய்வத்திரு. ம.வெ. நாராயணன் செட்டியார் – மீனாட்சி ஆச்சி** உலகம்பட்டி.

24. ஏப்ரல் 2015 : நாவலூருடையார். **திரு. சித. நடராஜன் செட்டியார், தெய்வத்திருமதி. இராஜம்மாள் ஆச்சி,** பொய்யாமணிப்பட்டி.

25. மே 2015 : நாவலூருடையார். **திரு. அரு.வே. மாணிக்கவேலு – சரஸ்வதி,** பொன்னமராவதி.

**26. ஜூலை 2015 : ஆமலூருடையார். திரு. வெ.இராம.சுப. செல்வம்** B.Sc., ACA., **– ஆனந்தம் ஆச்சி, அம்மன்குறிச்சி, சென்னை.**

27. ஜனவரி 2016 : அரும்பாக்கிளையார், தெய்வத்திரு. **மங்கைபாகன் செட்டியார் – சிகப்பி ஆச்சி,** புழுதிப்பட்டி.

28. மே 2016 : கழுகக்கூருடையார், **திரு. சி.சொ.மு. இராமையா செட்டியார் – தெய்வத்திருமதி. ஜெகநாதம் ஆச்சி,** கொன்னைப்பட்டி, தேனி.

29. செப்டம்பர் 2017 : ஆமலூருடையார். **திரு. வெ.இராம.சுப. நேசமணி செட்டியார் – அருள்நிதி புவனேஸ்வரி ஆச்சி,** அம்மன்குறிச்சி, சென்னை.

30. ஜனவரி 2018 : பணப்பாக்கூருடையார் **தெய்வத்திரு. சுப. மணிவாசகம் செட்டியார் – தேன்மொழி ஆச்சி,** காரைக்குடி.

31. செப்டம்பர் 2018 : கழுகக்கூருடையார் **திரு. சோம. கதிரேசன் செட்டியார் – தவமணி ஆச்சி,** பொன்னமராவதி, தொட்டாம்பாளையம்.

32. ஜூலை 2019 : அரும்பாக்கிளையார் **திரு. பொன். சிவஞானம் செட்டியார் – ராஜகுமாரி ஆச்சி,** சிறுகுடி.

**33. ஆகஸ்ட் 2019 : நாவலூருடையார்** தெய்வத்திரு. **சித. மாணிக்கம் செட்டியார் – அழகுமீனாள் ஆச்சி, பொய்யாமணிப்பட்டி.**

**34. ஆகஸ்ட் 2019 : வரதலூருடையார் ந. செல்வம் செட்டியார் – சிவயோகம் ஆச்சி, புழுதிப்பட்டி / கோவை.**

**35. ஜனவரி 2020 : பழனி ஆதிசைவ அன்னதான மடம் – அருள்மிகு பழனி ஆண்டவர் அறக்கட்டளை, பழனி.**

36. மார்ச் 2020 : மேலூருடையார் **தெய்வத்திரு. செ.பெ.அ. அலங்காரம் செட்டியார் – திருமதி. செம்பாயி ஆச்சி,** சிறுகுடி.

**37. அக்டோபர் 2020 :** பொன்னமராவதி **பூண்டிலூருடையார்**
**திரு. சி. வெள்ளனச்சாமி செட்டியார் - திருமதி. சாந்தி ஆச்சி, சிறுகுடி / கோவை.**

**38. டிசம்பர் 2020 : கழனிவாசலூருடையார் கிருங்காக்கோட்டை**
**திரு.** V. **லட்சுமணன் செட்டியார் - பாக்கியலட்சுமி ஆச்சி தம்பதியர்**

**39. மே 2021 :** மேலூருடையார் **செம்பூதி/பொன்னமராவதி** தெய்வத்திருவாளர்கள்
**தே.மா. சுப்பையா செட்டியார்- சுப. பூங்கோதை ஆச்சி**

# உண்மை பேசுவதின் சிறப்பு

**நீங்கள்** பொய் பேசினால் அந்தப் பொய்யை நீங்கள் காப்பாற்ற வேண்டும். அதே நேரம் நீங்கள் உண்மை பேசினால் அந்த உண்மை உங்களைக் காப்பாற்றும். ஒரு பொய்யை மறைக்க பல பொய்கள் சொல்ல வேண்டும். ஒரு உண்மையைச் சொல்ல அப்படி எதுவும் செய்ய வேண்டியதில்லை. **"தர்மத்தின் வாழ்வுதனை சூது கவ்வும் ஆனால் தர்மமே வெல்லும்."** இது எல்லோருக்கும் பொருந்தும். தாமதமாக கிடைத்தாலும் தர்மத்திற்கு என்றுமே மதிப்பு உண்டு.

உண்மை பேசுவதில் இருக்கும் இன்னொரு சிறப்பு என்னவென்றால் நீங்கள் என்ன சொன்னீர்கள் என்பதை நினைவில் வைத்திருக்க வேண்டியதில்லை. உண்மை என்றும் மாறப்போவதில்லை. பொய் சொன்னால்தான் யாரிடம் என்ன சொன்னோம்; எங்கே சொன்னோம் என்றெல்லாம் நினைவில் வைத்திருக்க வேண்டும்.

எப்போதும் உண்மையையே பேசுங்கள். உங்கள் மனதிற்கு உண்மையாய் இருங்கள். பொய்யாக நடிக்காதீர்கள். மனதிற்கு பிடிக்காததைச் செய்ய வேண்டாம். அது அனைவருக்கும் வருத்தத்தையே தரும். வாழ்க்கை என்பது ஒரு முறைதான். அதை நன்றாக வாழ்ந்தோம் என்ற மன நிம்மதியை நீங்களே உங்களுக்குத் தாருங்கள்.

**- திருமதி. தேவிகா ராஜவேலு, பொன்னமராவதி.**

**சமையல் டிப்ஸ்**

இட்லி மாவுடன் உப்பு சேர்த்து கலக்கியபின் அளவுக்கு ஏற்றபடி 1 அல்லது 2 டீஸ்பூன் நல்லெண்ணெய் ஊற்றி கலந்து அவித்தால் இட்லி மிருதுவாகவும், நல்ல சுவையுடனும் இருக்கும். செய்துபாருங்கள் இல்லத்தரசிகளே!

– பி.எல்.ஆர், கோவை

சென்னை மாநகர் அருவியூர் வடக்குவளவு நகரத்தார் சங்கம்
மேன்மேலும் வளர எங்கள் இதயங்கனிந்த நல்வாழ்த்துக்கள்.






**S. Chandrasekar** B.Sc., B.Ed., M.B.A

**Mobile: 98404 39115**

## ANANTHAM CONSULTANCY
## LIC AND TAX ADVISOR

**Income Tax, GST,**

**Pan Card**

**7/552, 7th Block, Mogappair West,**
**Chennai - 37.**

**Email: chandrupmv@gmail.com**

# இளமையோடு வாழும் ரகசியம்

அனைவருக்கும் என்றும் இளமையாகவே இருக்க வேண்டும் என்ற ஆசை இருக்கும். அதற்கு சான்றோர்கள் மிகவும் எளிய ஒரு வழியை கூறுகின்றனர். **“ஓரடி நடவேன், ஈரடி கடவேன். இருந்து உண்ணேன், படுத்து உறங்கேன்”** என்பதே அது. **இதற்கான விளக்கம்.**

**ஓரடி நடவேன் :** நமது உடம்பின் நிழல் கால் அளவில் ஓர் அடியாக இருக்கும். உச்சிப்பொழுது நேரத்தில் நான் வெளியில் நடக்க மாட்டேன். உச்சி வெயில் ஆகாது என்பதை பெரியோர் சொல்ல கேட்டிருப்போம்.

**ஈரடி கடவேன் :** அதாவது ஈர அடி கடவேன், ஈரமான இடங்களில் நீண்ட நேரம் நிற்பதோ, நடப்பதோ கூடாது என்பது அர்த்தமாகும்.

**இருந்து உண்ணேன் :** ஏற்கனவே நாம் சாப்பிட்ட உணவு வயிற்றில் இருக்கும் போதே மேலும் உண்ண கூடாது என்பது அர்த்தம். நன்கு ஜீரணமான பின்புதான் மறுபடியும் சாப்பிட வேண்டும்.

**படுத்து உறங்கேன் :** தூக்கம் வந்த பிறகுதான் படுக்கைக்குச் செல்வேன். படுத்துக் கொண்டு தூக்கம் வரவில்லையே என நினைத்தபடி படுக்கையில் கிடக்கமாட்டேன் என்பது அர்த்தம்.

**இவைகளே நீண்ட நாள் இளமையோடு வாழும் ரகசியம் என முன்னோர்கள் நமக்கு எளிமையாக நினைவில் கொள்ளும்படி சொல்லி இருக்கின்றார்கள்.**

**- திருமதி. ஆனந்தலெட்சுமி கார்த்திக் கோவைப்புதூர்.**

# காப்பு கட்டும் விழா

பூர்வீகம்-குளத்துப்பட்டி, பணப்பாக்குமூருடையார் தெய்வத்திரு K.A.V. சிவானந்தம் செட்டியார்-நலமுடன் திருமதி மலர்விழி ஆச்சி இவர்களது மகன் வழிப்பேத்தியும், உலகம்பட்டி திரு பழ. இராமச்சந்திரன் செட்டியார்-தமிழ்செல்வி ஆச்சியின் மகள் வழிப்பேத்தியும், திரு சிவ. பாக்யநாதன்-இரா. பிரியங்கா தம்பதியரின் மகளுக்கு 24-06-2021 வியாழன் அன்று கோயமுத்தூர் அன்பு இல்லத்தில் அங்காளம்மன் [என்கிற] நன்முகை என்று பெயர் சூட்டி சுற்றமும் நட்பும் வாழ்த்த காப்பு கட்டும் விழா இனிதே நடைபெற்றது. **தகவல்: திரு பழ.இராமச்சந்திரன், கோயமுத்தூர்.**

## வாசகர் குரல்: 153-1

1. விழுப்புரம் தெய்வத்திரு சு. சிவலிங்கம் செட்டியார் நலமுடன் திரு சி. அன்புமலர் ஆச்சி இவர்களின் மகள் திருமதி. சி. ஆர்த்திகா இளையராஜா நம் சமூகத்தில் முதல் பெண் வழக்கறிஞர் ஆனது பெருமைக்குரியது. இவரை தஞ்சை அருவியூர் வடக்குவளவு நகரத்தார் சங்கம் மகிழ்வுடன் பாராட்டுவதோடு வாழ்க பல்லாண்டு! என்று வாழ்த்துகிறது!

**2. பெண்ணிற்கு நம் முன்னோர்கள் தந்த முக்கியத்துவம் :**

இந்த கட்டுரையில் திருமணமாகாத ஆணுக்கு எந்தவிதமான மரியாதை, மதிப்பும் கிடையாது. இது ஆணுக்கு எந்தவிதமான மதிப்பும் கிடையாதா? இந்த ஆணுக்கு சமூகத்தில் ஒரு பெண் கொடுத்து அந்தஸ்து உண்டாக்கி சிறப்பு உண்டாக்கலாமே.

**3. திருமணத்திற்கு நாள் பார்க்கும்போது கவனத்தில் கொள்ளவேண்டிய விதிகள் :**

ஞாயிறு, திங்கள் கிழமைகளில் கல்யாணம் நடத்தகிறார்களே இதனால் நன்மையா தீமையா என்பதை விளக்கவேண்டியது குரல் அசிரியர் அவர்கள்.

**- திரு. P. சிவன்ஜோதி, தஞ்சை.**

**ஆசிரியரின் பதில் :** புதன், வியாழன், வெள்ளி போன்ற சுபஆதிபத்தியமுடைய கிழமைகள் மிக ஏற்றவை என்றும் இதர கிழமைகள் அவ்வளவு உகந்தவை அல்ல என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அவ்வளவு உகந்தவை அல்ல என்றுதான் குறிப்பிடப்பட்டுள்ளதே தவிர உகந்தவையே அல்ல என்று குறிப்பிடப்படவில்லை. மற்ற கிழமைகளில் திருமணம் செய்வது அவரவர் சூழ்நிலையும் விருப்பமும்.

## வாசகர் குரல் - 153 - 2

ஓடினால்தான் நதி வீசினால்தான் காற்று
பாடினால்தான் குயில் பாடுபட்டால்தான் மனிதன்
நற்செயல்தான் செல்வந்தர்.

எதிலோ நான் படித்தது இன்று நமது நகரத்தார் குரல் மே 2021 மாத இதழில் படிக்கும்போது (பக்கம்5-6) ஆதரவற்ற

வறுமையில் வாடும் ஏழை மாணவர்கட்கு மாபெரும் கொடை வள்ளல் கோவை சங்கத் தலைவர் திரு ஏ.பி.எஸ்., கல்வி வளர்ச்சிக் கழகச் செயலாளர் திரு சுப. செல்வம், கணேஸ் சாரிஸ் திரு. G. இளங்கோவன் ஆகியோர்கள் நம்மவர்கள் பயின்று பட்டம் பெற உதவித்தொகை ஏற்றுள்ளார்கள் என்பதை படித்து-நற்செயல் புரியும் செல்வந்தர்களை வாழ்த்தி பாராட்டுகின்றேன்.

C.A. தேர்வில் தேர்ச்சி பெற்ற நம்மவர்கள் பலபேர் இருப்பினும் C.A. படித்தால் சுயமாக C.A. Firm நிறுவலாம், நம்மவர்கள் இப்படிப்பை படித்து முன்னேறலாம், உதவி தேவைப்படுவோர் என்னைத் தொடர்பு கொள்ளலாம் என தெரிவித்து, செல் நம்பர் கொடுத்து இருப்பது நம் சமூகப் பிள்ளைகளுக்கு நல்வழிகாட்டி எழுதிய நல்ல மனம் கொண்ட ஆடிட்டர் திரு. C. சூர்யாவை வாழ்த்தி பாராட்டுகின்றேன்.

நமது குரல் மே இதழ் பக்கம் 60-இல் என் தம்பி கோவை T. சரவணன், மதுக்கரை ஆறுமுகம், வா.புதூர் ராஜேந்திரன் செட்டியார், செம்பதி அத்தான் தேனப்ப செட்டியார், பொய்யமணிப்பட்டி மாப்பிள்ளை S.M. தங்கராஜ் ஆகியோர்களது சிவபாதம் புகைப்படங்கள்-கடைசி முகம் பார்க்க நேரில் பார்ப்பதுபோல் மிகத் தெளிவாக இருந்தன, நேரில் அஞ்சலி செய்வது போல அவர்களின் புகைப்படத்துடன் வெளியிட்ட ஆசிரியர் பெருமக்களை வணங்குகின்றேன்.

நமது குரல் மே இதழ் பக்கம் 10-இல் கல்வி உதவித்தொகை பெற உதவும் இணையதளங்களை வெளியிட்டு நம் பிள்ளைகளுக்கு படிப்புக்கு வழிகாட்டியதும்; பக்கம் 50-இல் நம் வாழ்க்கையை எப்படி மாற்றுவது? என நடைமுறை சிந்தனையை செயல்படுத்தவும்; பக்கம் 51-இல் நம் மனம் இதுதான் பிடிக்கும், இதுதான் சரியாக இருக்கும் என மூளை கூறுகிற நேரத்தில் இதுவா? அதுவா? என மாறிக்கொண்டே வரும் எனவும், பேராசையை விட்டு விலகினால் ‘சரி’ என ஒரு முடிவுக்கு வரலாம் என்ற கருத்து உணர்வுப் பூர்வமாக எழுதியதும்; பக்கம் 56-இல் உடல் நலம் பற்றி நடைபயணம்

செய்தால் அமைதியும், உடல் நலமும் முன்னேற்றம் உண்டு எனவும் அறிவு சார்ந்த அரிய பல கருத்துக்களை எழுதி வெளியிட்ட ஆசிரியர் திரு சுப. செல்வம் அவர்களைப் பாராட்டி வாழ்த்துகின்றேன். **- பி.எல்.ஆர், கோவை.**

## *முதியோர்களுக்கு வழிகாட்டுங்கள் :*

ஆசிரியர். திரு சுப. செல்வம் அவர்கள் நல்ல பல உதவி இணையதளங்கள் எழுதி வழிகாட்டியது போல முதியோர்களுக்கு உதவும் இணையதளங்கள் அல்லது உதவும் கரங்கள் இருப்பதை தெரிந்தவர்கள் எழுதினால் நாம் நம்மவர்களுக்கும், பிறருக்கும் வழிகாட்ட ஏதுவாக இருக்கும். தெரிந்தவர்கள் வழிகாட்டலாமே. எழுதுங்கள் அன்புடன் வேண்டுகிறேன். **- பி.எல்.ஆர், கோவை.**

*ஆசிரியரின் பதில் :* பெரியவர்களுக்கு எதுபோன்ற வழிகாட்டுதல் தேவை என்பதை குறிப்பிட்டு எழுத வேண்டுகிறேன்.அப்பொழுது தான் அதற்கான வழிகளையும், உதவிகளையும் செய்ய இயலும் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

## வாசகர் குரல் : 153 - 3

மனைவி என்ற பெண் உடன் இல்லாமல் மனைவியை இழந்த கணவனுக்கு ஏற்படக்கூடிய மனவலியும், குடும்பக் கஷ்டங்களும் அதனால் பாதிக்கப்பட்ட கணவன்மார்களால் தான் உணரமுடியும். இன்றைய 21-ஆம் நூற்றாண்டில் கணவனை இழந்த பெண்களுக்கும் சமூக முக்கியத்துவம் கொடுத்து பூவும், பொட்டும் அணிந்து நாகரிகமாக உடையணிந்து, வயதானவர்களை தெய்வமாக மதித்து வணங்கி போற்றி வருகிறோம். இளம் வயது பெண்ணாக இருந்தால் அவர்களது வாழ்க்கைக்கு துணையாக மறுமணம் செய்து வைக்கும் நிலைமைக்கு நமது சமுதாயம் மாறி உள்ளது. வளர்ந்து உள்ளது.

இப்படிப்பட்ட காலத்தில் வாழக்கூடிய நாம், நமது மாண்புமிகு முன்னாள் முதலமைச்சர் கர்மவீரர் காமராஜர் அவர்களையும், முன்னாள் குடியரசுத் தலைவர் மரியாதைக்குரிய A.P.J. அப்துல்கலாம் அவர்களையும் இன்றைய பாரத பிரதமர் மாண்புமிகு நரேந்திர மோடி அவர்களையும் நினைத்துப் பாருங்கள். முதலாமவர் திருமணம்

செய்யாமலேயே ஏழை எளிய மக்களின் கல்வி கண்ணைத் திறந்து அவர்களின் வாழ்க்கையில் ஒளி ஏற்றி வைத்தவர்; இரண்டாமவர் உலக மக்களையே கனவு காணச் செய்து உயர்வை ஏற்படுத்தியவர்; மூன்றாவர் மனைவியின் துணை இன்றி நமது பாரத நாட்டையே சிறப்புடன் ஆண்டு கொண்டு இருப்பவர்.

ஆலம் விழுதுகள் போல் உறவுகள் ஆயிரம் இருந்தும் என்ன?
வேர் என நீ இருந்தாய்! அதில் நான் வீழ்ந்து விடாதிருந்தேன்.

போன்ற திரை இசைப் பாடல்களை மேற்கோள் காட்டி, பெண் குலத்தின் பெருமை போற்றி மகளிரை மகிழ்வடையச் செய்யலாம்.

இன்றைய காலகட்டத்தில் எதுவும் நிரந்தமில்லை என்பதை நினைத்து தகவல்களை பிரசுரிக்கும் முன் அந்த செய்தியால் மற்றவர்களுக்கு மனவலியும் அதனால் மனவேதனையும் அளிக்காத வகையில் குரல் பொறுப்பாசிரியர் கவனமுடன் பார்த்துக் கொள்ள வேண்டும்.

"கண்ணீர் கலங்கி கண்ணில் இறங்கி நெஞ்சில் விழுந்தால் சொந்தம் புரியும்."

**- பொன்.சிவஞானம், தலைவர் அ.வ.ந. சங்கம். சிறுகுடி.**

*குரல் ஆசிரியரின் பதில் :*

கட்டுரையின் நோக்கம், சமூகத்தில் பெண்களுக்கு அளிக்கும் முக்கியத்துவம் பற்றியது. திருமணமாகதவர்களை ஒரு புள்ளியாகக் கூட அங்கீகரிப்பதில்லை என்பதை அனைவரும் அறிவோம். எதையும் தனியாகச் செய்வதை விட மனைவியுடன் சேர்ந்து செய்வது சிறப்பும் அதிகம்.பலனும் அதிகம் என்பது தான் சொல்ல வந்தது. மனைவி இறந்த பின்பு நடக்கக்கூடிய நடைமுறைற செய்திக்கும், இதற்கும் தொடர்பு இல்லை.

இதற்கும் மேலே இந்த செய்தியினால் யாருடைய மனமும், புண்பட்டிருக்குமேயானால். அதற்காக வருத்தம் தெரிவித்துக் கொள்கிறேன்.

**- குரல் ஆசிரியர். சுப. செல்வம்.**

# புதுமண தம்பதிகள்





**மணமக்கள் :**

செல்வன். C.S. **அலங்காரம் மணிகண்டன்** B.Tech.

செல்வி. **செல்லக்கண்ணு (எ)** S.B. **காவ்யா** B.Sc.,

**மணமகனின் பெற்றோர்கள்:**

திரு. **N.AL.** சொக்கலிங்கம் செட்டியார்–சண்முகவள்ளி ஆச்சி, உலகம்பட்டி / சென்னை.

**மணமகளின் பெற்றோர்கள்:**

திரு. **S.S.** பாலகிருஷ்ணன் செட்டியார் – ஜெயந்தி ஆச்சி கோவை.

**நிகழ்விடம் : ஸ்ரீ குமரன் மஹால், கோவைப்புதூர்.**

**மணநாள் : 13-06-2021 ஞாயிற்றுக்கிழமை.**

---



**மணமக்கள் :**

செல்வன் : **ச. கார்த்திக்** B.C.A.

செல்வி : **மு. ஸ்வரூபா** B.Sc.,D.C.A.

**மணமகனின் பெற்றோர்கள் :**

திரு. சுப. சண்முகம் செட்டியார்

திருமதி. ச. உமா ஆச்சி, தஞ்சாவூர்

**மணமகளின் பெற்றோர்கள் :**

திரு.வெ. முருகேசன்செட்டியார்

திருமதி. தனலெட்சுமி ஆச்சி, மன்னார்குடி.

**நிகழ்விடம்: சிகாரா மஹால், தஞ்சாவூர்.**

**மணநாள்: 28-06-2021 திங்கட்கிழமை**

---



**மணமக்கள் :**

செல்வன் : **Er. G. நாககுமார்** B.E.MS.,

செல்வி : **Er. A. ஆர்த்தி** M.E.,

**மணமகனின் பெற்றோர்கள் :**

திரு. அ. கெங்கேஸ்வரன் செட்டியார்

திருமதி. கெ. மாலதி ஆச்சி, சிறுகுடி

**மணமகளின் பெற்றோர்கள் :**

திரு.C. அருணகிரி செட்டியார்–அலங்கார லெட்சுமி ஆச்சி,கோவை

**நிகழ்விடம் : மங்கைநாயகர் மன்றம்,** சிறுகுடி.

**மணநாள்: 13-06-2021 ஞாயிற்றுக்கிழமை.**

---



**மணமக்கள் :**

செல்வன் : **M.செல்வகுமார்** B.E.

செல்வி : **S.சிம்லா (எ) ரம்யா** M.Sc.,

**மணமகனின் பெற்றோர்கள் :**

திரு.மா. முருகானந்தம் செட்டியார்

திருமதி. மு. இந்திரா தேவி ஆச்சி சென்னை.

**மணமகளின் பெற்றோர்கள் :**

திரு.ம.சுப்பிரமணியன் செட்டியார்- கிருஷ்ணவேணி ஆச்சி தஞ்சாவூர்.

**நிகழ்விடம்** : **மணமகன் இல்லம், குன்றத்தூர் சென்னை.**

**மணநாள்** : **13.06.2021 ஞாயிற்றுக்கிழமை.**

---

**திருத்தம் :** மே 2021 மாத குரல் பக்கம் 35-இல் வெளியிட்டுள்ள புதுமண தம்பதிகள் இரண்டாவதில் **மணமகன் பெயரை திரு. ந. செல்வமருது** என்று திருத்தி வாசிக்கவும். நேர்ந்த தவறுக்கு வருந்துவதுடன், சம்பந்தப்பட்டவர்களிடம் மன்னிப்பும் கேட்டுக் கொள்கிறேன்.

**- சுப. செல்வம், குரல் ஆசிரியர்**





**Rtn.PHF.Er.M.SETHURAMAN** B.E., MBA., NEBOSH (Dubai-UAE)
IOSH, DSM, DIFSM, MD (Acu), D.Astro, Ex.TNSTC.Ltd.

**S.SHANTHI** B.Com.,

**S.VIJAY** B.E., ABUDHABI, UAE

**CELL : 81223 80075**

www.vijayguesthouse.com








- DELUXE AC ரூம்கள்
- AC ரூம்கள்
- NON AC ரூம்கள்
- பெரிய HALL வசதி
- 24 Hrs WIFI இன்டர்நெட் வசதி
- ஒவ்வொரு ரூமிலும் TV வசதி
- ATTACHED BATHROOMS
- WESTERN TOILETS



# VIJAY GUEST HOUSE
## (LODGE)
## NEAR BUS STAND, MANAPPARAI.

குறைவான கட்டணத்தில், நிறைவான வசதிகளுடன்



# கண்ணீர் அஞ்சலி



தோற்றம்
03-06-1967

மறைவு
16-06-2021



தெய்வத்திரு.

## N.N. சாமி

**நிழல்போல் இருந்தாய்.....**
**நினைவாக மாறினாய்....**
**கண் இமைக்கும் நேரத்தில்....**
**கண்ணீர் துளிகளானாய்....**

நீங்கா நினைவுகளுடன்...

தாயார் : **N. சத்யா ஆச்சி**
மனைவி : **N. அன்னம்மா ஆச்சி**
மகன் : **N. சாய் ரமணா**
மகள் : **N. சாய் மீனாள்**
தம்பி : **N. அன்பு - A. ராஜேஸ்வரி,**

கண்ணீர்

# அஞ்சலி





உதித்தது
17.9.1998



உதிர்ந்தது
3.7.2021

## தெய்வத்திரு. தி. ஹரிக்குமார்

### இனியவனை இழந்துவிட்டோம்

இனி அவனை இழந்துவிட்டோம்
இனிய முகம்
கனிவான பேச்சு
குழந்தை உள்ளம்
கள்ளங் கபடமில்லாத நட்பு
காணுமிடமெங்கும்
தலையசைக்கத் தயங்கமாட்டாய்
தேவையில் உதவி
உனது உறுதியான இதயத்துள்
இப்படி ஒரு வியாதியைப் புகுத்திய
காலன் கொடியவன்.

கலங்கிய விழிகளோடும்
நொருங்கிய உள்ளங்களோடும்
கேட்கிறேன் ஏன் இந்த அவசரம்
எமைவிட்டு பிரிவதற்கு
நீ நடந்த பாதச்சுவடுகள்
இன்னும் அழியவில்லை
அழுவதற்கு எங்கள்
விழிகளில் நீரில்லை
ஆனாலும் தேற்றுகின்றோம்
அடைக சாந்தி
ஓம் சாந்தி ஓம் சாந்தி ஓம் சாந்தி

பெற்றோர்கள் : மா. திருஞானம்-தி. மாலதி
அக்கா மாமா : அ. திவ்யா - அ. அருண்குமார்
குழந்தைகள் : அருணாச்சலம், அஸ்வின்
மற்றும் குடும்பத்தார்

ஞானம் கயிறு மொத்த வியாபாரம்,



பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்தும்
இருள்தீர எண்ணிச் செயல்

- திருவள்ளுவம்

## நல்வாழ்த்துகளுடன்...




**DEEPA ERECTORS PRIVATE LIMITED**

No. 16/5, 1st Main Road, Ramakrishna Nagar,
Ernavoor, Chennai - 600057
mail to : depl@depltd.in




**PHOENIX OILFIELD SERVICES & CONTRACTING LLC**

P.O. BOX: 1151, WADI KABIR P.C. 117,
Sultanate of Oman.

*Specialists in :*

**Construction of Storage Tanks, Pressure Vessels, Pipelines and Blasting & Painting in India & Overseas**



R. Paramasivam B.E.,
***Managing Director***
Ph.: 9884660379



Pa. Mathivanan B.E.,
***Chief Executive Officer***
& A. Nivetha B.E., M.B.A.,
***Business Analyst***



Pa. Shankar B.E., M.S.,
(Sweden)
***Consultant***



# மாத்திரை சாப்பிட சரியான முறை

மாத்திரைகள் எடுத்துக்கொள்ளும் பொழுது உணவுக்கு முன்பாக உண்ண வேண்டியவை, உணவுக்குப் பின்னர் உண்ணவேண்டியவை, உணவோடு சேர்த்து உண்ண வேண்டியவை என மாத்திரைகள் பல வகைகளில் உள்ளன. மேலும் நோய் வராமல் தடுப்பதற்காகவும், ஊட்டச்சத்துகளுக்காகவும் கூட மாத்திரைகள் இருக்கின்றன. இந்த மாத்திரைகளைச் சிலர் வாயில் போட்ட பிறகு தண்ணீர் குடிப்பார்கள். சிலர் வாயில் தண்ணீரை விட்டுக்கொண்டு மாத்திரை போடுவார்கள். அப்படியே வெறும் வாயில் விழுங்கி விடுபவர்கள்கூட உண்டு. மேலும் காபி, டீ, குளுக்கோஸ் கரைசல், ஜுஸ், குளிர்ந்த நீர், வெந்நீர் என எந்தத் திரவப் பொருள் கிடைத்தாலும் அதனோடு சேர்த்து விழுங்குபவர்களும் உண்டு. இப்படி மாத்திரையை எதனோடு சேர்த்தும் எடுத்துக் கொள்ளலாம்.. இது சரியான முறையா? மாத்திரை எடுத்துக் கொள்ளும் சரியான முறைகள் என்னென்ன? என்பதை தெரிந்து கொள்வோம்.

மாத்திரைகள் வயிற்றில் உள்ள அமிலத் தன்மையைப் பொறுத்துச் செயல்படுகின்றன. பொதுவாக உணவு உண்பதற்கு 20 நிமிடங்களுக்கு முன்னர் உணவு உண்ட 20 நிமிடங்களுக்குப் பின்னர் என இரண்டு முறைகளில் மாத்திரைகளை எடுத்துக் கொள்ள வேண்டும். உணவு உண்பதற்கு முன்னதாக எடுத்துக் கொள்ளப்படும் மாத்திரைகளின் செயல்பாடு மிதமானதாக இருக்கும். உணவு உண்ட பின்னர் எடுத்துக் கொள்ளப்படும் மாத்திரைகளின் செயல்பாடு தீவிரமாக இருக்கும்.

நோய் தீர்க்கும் மாத்திரைகள், வைட்டமின், இரும்புச் சத்து மாத்திரைகள் போன்றவை பெரும்பாலும் உணவுக்கு பின்னர் தான் எடுத்துக்கொள்ளப்படுகின்றன. அசிடிட்டி மாத்திரை, வாந்தி நிற்கும் மாத்திரை போன்றவை உணவுக்கு முன்னர் எடுத்துக் கொள்ள பரிந்துரைக்கப்படுகின்றன.

மாத்திரையை உண்ணும் போது வாய் கொள்ளும் அளவுக்குச் சிறிது நீரைப் பருகி, அதில் மாத்திரையைப் போட்டு விழுங்குவதுதான் சரியான முறை. இதனால் விழுங்கும் மாத்திரை உணவுக்குழாயில் தடைபடாமல் செல்லும். நீரால் மாத்திரைக்கு எந்தவிதப் பாதிப்பும் ஏற்படாது. மாத்திரையை விழுங்கிய பின்னர் நான்கு முதல் ஐந்து மடங்கு நீர் பருக வேண்டும். **வெதுவெதுப்பான நீரில் மாத்திரையை எடுத்துக் கொள்வது மிகவும் நல்லது.**

மாத்திரையை நீரில் கரைத்துக் குடிப்பதும் சரியான முறையே. இதனால் மாத்திரையை எடுத்துக் கொள்ளும் முறை எளிதாகிறது. பெரும்பாலும் குழந்தைகளுக்கு மாத்திரையை நீரில் கரைத்துக் கொடுங்கள் என்பதே மருத்துவரின் பரிந்துரையாக இருக்கிறது.

பாலுடன் ஆன்டிபயாட்டிக் மாத்திரைகளை எடுக்கும்போது கால்சியத்துடன் ஆன்டிபயாட்டிக் வினைபுரிந்து நீரில் கரையாத கால்சியம் உப்பை உருவாக்கிவிடும். மாத்திரையின் பலனும் வீணாக முற்றிலுமாகக்கூட வெளியேறலாம். இதனால், மாத்திரை சாப்பிடுவதால் எந்தப் பலனும் கிடைக்காத நிலை உருவாகும். நோயில் இருந்து குணமாதல் தாமதமாகும். **எனவே மாத்திரை சாப்பிடுவதற்கு இரண்டு மணி நேரத்துக்கு முன்னர் அல்லது பிறகு பால் பொருட்களை எடுத்துக் கொள்ளலாம்.**

மாத்திரைகளைப் பொடித்தோ, கேப்ஸ்யூல் மாத்திரைகளை திறந்து நேரடியாக எடுத்துக் கொள்வதோ தவறு. சில மாத்திரைகள் எந்த நேரத்தில் செயல்பட வேண்டும் என்பதைப் பொறுத்து தயாரிக்கப்பட்டிருக்கும், இதை பொடித்துச் சாப்பிடும்போது மாத்திரையின் செயல்திறன் குறையலாம். சில மாத்திரைகளில் வெளிப்புறம் உடனடியாக கரைந்து பலன் அளிக்கும் வகையிலும், உள்புறம் நீண்ட நேரம் தாக்குப்பிடித்த பிறகு கரையும் வகையிலும் இருக்கும். இதைப் பொடித்து சாப்பிடும்போது பலனளிக்காமல் போய்விடலாம். டாக்டர் பரிந்துரைத்தால் தவிர பொடித்துச் சாப்பிடக்கூடாது.

**தவறான முறைகள் :**

1. ஐஸ் வாட்டர் உடன் மாத்திரைகளை எடுத்துக்கொள்வது மிகவும் தவறான முறை. பொதுவாக உணவு உண்ட பின்னர் ஐஸ் வாட்டர் குடித்தாலே, உணவு செரிமானம் தாமதமாகி விடும். **மாத்திரையைக் குளிர்ந்த நீரில் எடுக்கும் போது, மருந்து செயல்படும் நேரத்தைத் தாமதப்படுத்தி விடும்.** மேலும் நீரானது உணவுடன் சேர்த்து வயிற்றிலேயே நீண்ட நேரம் தங்கிவிடும். அவ்வாறு நீண்ட நேரம் வயிற்றில் தங்குவதால் கொழுப்புக்கட்டிகள் உருவாகும். மேலும் வயிற்றில் உள்ள கொழுப்புக் கட்டிகள் கரையாமல் உடல்பருமனை அதிகரிக்கச் செய்யும். குளிரூட்டப்பட்ட தண்ணீரில் மாத்திரையைச் சேர்த்துச் சாப்பிடும்போது தொண்டை வலி ஏற்படும். சளி பிடிக்கக்கூடும்.
2. **காபி, டீ யுடன் சேர்த்து மாத்திரையை எடுத்துக்கொள்வது மிகவும் தவறான முறை.** இவற்றில் உள்ள 'காஃபின்' மாத்திரையில் உள்ள வேதிப்பொருட்களுடன் வினைபுரியக் கூடும். உதாரணமாக காபியுடன் சேர்த்து இரும்புச் சத்து மாத்திரைகளை எடுத்துக் கொண்டால், காபியில் உள்ள காஃபின் மாத்திரையில் உள்ள இரும்புச் சத்து கிரகிக்கப்படுவதைத் தவிர்த்துவிடும். எனவே மாத்திரை சாப்பிடுவதற்கு ஒரு மணி நேரத்துக்கு முன்னர் அல்லது ஒரு மணி நேரம் கழித்து காபி, டீ அருந்தலாம்.
3. **மாத்திரைகளை நீர் இல்லாமல் எடுத்துக் கொள்ளக் கூடாது.** அவ்வாறு எடுத்துக் கொண்டால் தொண்டையில் மாட்டிக் கொள்ளும் நிலை ஏற்படலாம். சுவாசப் பிரச்சனையை ஏற்படுத்தலாம். தொண்டை வறட்சியை ஏற்படுத்தும். உணவுக்குழாயில் மாட்டிக் கொண்டால், அசௌகரியமான உணர்வு ஏற்படும். சில மாத்திரைகளின் சுவை நாவுக்கு ஒவ்வாதபோது குமட்டல் உணர்வு, வாந்தி ஏற்படும்.

எனவே மேற்கண்ட தவறுகளை தவிர்த்து எப்போதும் மிதமான சுடுநீரில் மாத்திரைகளை எடுத்துக் கொள்வது மிகவும் சிறந்தது.

**- சுப. திருஞான சம்பந்தம், துளசி மெடிக்கல்ஸ், சென்னை-61**

# புதிய கல்விக்காவலர்கள்

## கல்விக்காவலர்-36



மேலூருடையார்
தெய்வத்திரு செ. பெ.அ. அலங்காரம் செட்டியார்
(எ) சேதுராமன் செட்டியார்-செம்பாயி ஆச்சி.

### கல்விக்காவலர் குடும்பத்தினர்

**பெற்றோர் :**
தெய்வத்திரு செ.பெரிய அலங்காரம் செட்டியார்-
பாப்பாத்தி ஆச்சி
**மகள்கள் - மருமகன்கள் :**
திருமதி திலகம் ஆச்சி - இளங்கோ செட்டியார்
திருமதி யோகாம்பாள் (எ) கீதா - திருவாசகம்
**பேரன், பேத்திகள் :**
திருமதி இ. நாகேஸ்வரி (எ) சுகண்யா - ராகுல்
இ. நாகார்ஜுன், தி. வித்யஸ்ரீ, ரா. ஆராத்யா
என்றென்றும் வாழ்க வளமுடன்!

## கல்விக்காவலர்-37



பொன்னமராவதி பூண்டிலூருடையார்
**சி. வெள்ளச்சாமி செட்டியார் -**
**திருமதி சாந்தி ஆச்சி.**

### கல்விக்காவலர் குடும்பத்தினர்

**பெற்றோர் :**
தெய்வத்திரு ந. சிவசாமி செட்டியார் -
நலமுடன் செண்பக ஆச்சி
**மகன்-மருமகள் :**
வெ. வினோத்குமார் BBM- ஞானசௌந்தர்யா B.Sc.
வெ. விவேக்குமார் B.Com., MBA- காயத்ரி B.E.
**பேரன்-பேத்திகள் :**
வி. ரிஷிகாஸ்ரீ, வி. ரித்திக்ஸ்ரீ

## கல்விக்காவலர்-38



கழனிவாசலூருடையார்
**திரு.V. லெட்சுமணன்செட்டியார்**
**பாக்கியலட்சுமிஆச்சி**
கிருங்காக்கோட்டை

**பெற்றோர் :** திரு சொ.வைத்திங்கம் செட்டியார்
- திருமதி அழகு ஆச்சி
**மாமனார்-மாமியார் :**
திரு. சிவசாமி செட்டியார்-குஞ்சரம் ஆச்சி, பூசாரிபட்டி
**உடன்பிறந்தவர்கள் :**
1. தெய்வத்திரு V.மங்கைபாகன்செட்டியார்-நலமுடன் பொன்னழகுஆச்சி
2. தெய்வத்திரு V. வைத்திங்கம்செட்டியார் - பாஞ்சாஆச்சி
3. தெய்வத்திரு V. ராமன்செட்டியார் - மங்களம்ஆச்சி
4. தெய்வத்திரு V. பரமசிவம்செட்டியார் - நலமுடன்கலாதேவிஆச்சி
5. திருV.ஆறுமுகம்செட்டியார்-சாந்தாஆச்சி, கோவை.

## கல்விக்காவலர்-39



மேலூருடையார்
**தே.மா.சுப்பையா**
**செட்டியார்-**
**சுப.பூங்கோதை ஆச்சி,**
பொன்னமராவதி.

**பெற்றோர் :** திரு. தே. மாணிக்கம் செட்டியார்-
தேனம்மாள் ஆச்சி
**மாமனார் :** திரு. A.V.சேதுராமன் செட்டியார்
**மாமியார் :** சிவஜோதி ஆச்சி, பொன்னமராவதி.
**உடன் பிறந்தவர்கள் :**
1. வாழ்வுநிறை அ.சிவபாக்கியம் ஆச்சி - அண்ணாமலை செட்டியார்
2. வாழ்வுநிறை ஏ. மீனாம்பாள் ஆச்சி - ஏகாம்பரம் செட்டியார்.
3. வாழ்வுநிறை தே.மா. சண்முகம் செட்டியார் - ஞானம்பாள் ஆச்சி
4. வாழ்வுநிறை தே.மா. நாராயணன் செட்டியார் - நலமுடன் நா. சண்முகவள்ளி ஆச்சி. பொன்னமராவதி.
5. திரு.தே.மா.பழனிச்சாமி செட்டியார்-சரஸ்வதி ஆச்சி, பொன்னமராவதி.



# உமிழ்நீர் – உயிர் நீர்

சுப. நேசமணி. சென்னை - 61

உமிழ்நீர் – ஒரு உன்னத மருந்து. உணவில் எப்பொழுதும் இனிப்பை முதலில் சாப்பிடுங்கள். அதை dessert என்று கடைசியில் சாப்பிடாதீர்கள்.

நவீன உடலியல் உமிழ் நீரானது வாய், கன்னம், தாடை போன்ற வாய் பகுதியில் சுரப்பதாகச் சொல்கிறது. அது எங்கே சுரந்தாலும் அதற்கு அடித்தளமாக இருந்து அதை அதிகமாகச் சுரக்கச் செய்வதும், கட்டுப்படுத்துவதுமான வேலைகளைச் செய்வது எது என்றால் பிட்யூட்டரி சுரப்பியே ஆகும். **இந்த உமிழ்நீரைத்தான் 'காயப்பால்' என்று சித்தர்கள் சொல்வார்கள்.** என்னடா இது எச்சிலைப் போய் பெரிதாகப் பேசுகிறானே என்று நினைக்காதீர்கள்.

எச்சில் வேறு. உமிழ்நீர் வேறு. எச்சிலானது நாறும். உமிழ்நீர் நாற்றமடிக்காது. இது எப்பொழுதாவது நமக்கு வாயில் ஊறும். டாக்டர் ஊசி போடுவதற்கு முன் பீய்ச்சி அடிப்பாரே. அது போல சுரந்து அடிக்கும். வெட்ட வெளியாகிய சிரசில் ஊறுவது தன்னை உண்பவரின் பசியை போக்குவது ஆட்டுப்பால், மாட்டுப்பால் போல காயப்பால் நாற்றமடிக்காது என்று சித்தர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

இந்த உமிழ்நீரில் ஸ்டார்ச் இருக்கிறது. தாவரங்கள் இந்த ஸ்டார்ச் மூலமாகத்தான் தேவையான உணவை தயாரித்துக் கொள்கின்றன. அதற்குச் சூரிய ஒளியும் நீரும் இருந்தால் போதும். சித்தர்களும் இந்த வழிமுறையையே பின்பற்றி இருக்கிறார்கள். உமிழ்நீரில் இருந்து ஸ்டார்ச்சை பெற்ற உடல் அதன் உதவியோடு சூரிய ஒளியில் இருந்து உடலுக்குத் தேவையான சக்தியை தயாரித்துக் கொள்ளும். ப்ராணாயாமம் செய்தால் காயப்பால் அதிகம் சுரக்கும்.

எப்பொழுதும் துப்பிக் கொண்டே இருப்பவர்களுக்கு எப்பொழுதாவது சுரக்கும் இந்த உமிழ்நீரின் சக்தி கிடைக்காமலே போய்விடுகிறது. சித்தர்கள் உணவை நன்றாக மென்று அரைத்து நீர்போலாக்கி சாப்பிடச் சொன்னார்கள்.

அப்படிச் சாப்பிடும்போது உமிழ்நீர் சுரந்து உணவுடன் கலந்து நமக்கு பலம் கிடைக்கும். நீரை மெதுவாகச் சாப்பிடுவது போலக் குடிக்கச் சொன்னார்கள். அப்படிக் குடிக்கும்போது உமிழ்நீர், நீருடன் கலந்து நமக்கு நல்ல பலன் தரும். ஆச்சிரியமாக இருக்கிறதல்லவா?

வாய்துர்நாற்றம் முதல் உடலின் உள் உறுப்புகளில் ஏற்படும் ஆபத்தான புண்கள்/கட்டிகள் வரை அனைத்தையும் சரி செய்யும் வல்லமை உமிழ் நீருக்கு உண்டு. சரி நாம் செய்ய வேண்டியது என்ன...வழக்கம் போல உடல் (உமிழ் நீர்) சொல்வதை கேட்பது தான்....அனுபவத்தில் நல்ல தூய நீர் போல சுவைக்கும் உமிழ் நீர் இருந்தால் உடல் நன்றாக உள்ளது என்று பொருள். சில நேரம் புளிப்பாக கசப்பாக இருக்கும். அந்த நேரங்களில் உணவை, முக்கியமாக சமைத்த உணவை தவிர்த்து, நல்ல பழங்கள் அல்லது நீர் அருந்தினாலே போதுமானது. அடுத்த வேளைக்குள்ளாக அந்த சுவையுணர்வு மாறிவிடும். பசி உணர்வு அறிந்து உணவு உண்ண இயலாதாவர்கள், உமிழ் நீரின் சுவை உணர்வு அறிந்து அதற்கேற்றார் போல் உணவு உண்ணலாம். பூச்சி மருந்துகள், இராசாயன உரங்களுக்கு பயந்து பழங்களை தவிர்ப்பவர்களுக்கு ஒரு செய்தி. அதிக பட்சம் 10 சதவீதம் இரசாயனம் என்றாலும் கூட, மீதி 90 சதவீதம் இயற்கை பழங்களில் உள்ளது. அதைத் தவிர்த்தால், பிறகு 100 சதவீதம் இரசாயனம் கொண்ட மருந்துகளை உண்ண நேரிடலாம்... “எச்சிலைத் துப்பாதீர்” என்ற வாசகம் தாங்கிய பலகைகளை நாம் பல இடங்களில் பார்த்திருப்போம். எச்சில் என்பது வாயில் ஊறும் உமிழ்நீர். அது உணவை செரிப்பதற்கும், வாயின் உள் பகுதியையும், தொண்டைக் குழியையும் ஈரப்பதமாக வைத்திருப்பதற்கும் உதவுகிறது.

உடல் என்னும் வீட்டில் இருக்கும் ஒன்பது வாசல்களில் வாயும் ஒன்று. இது உணவை உண்பதற்கும், பேசுவதற்கும் பயன்படுகிறது. **உமிழ்நீரை வெளியில் துப்புதல் ஆகாது** என சித்தர்கள் முதல் தற்கால மருத்துவர்கள் வரை கூறுகின்றனர். புளிப்பு, இனிப்பு இவற்றின் சுவையை உணர்ந்தால் வாயில் உமிழ்நீர் தானாக ஊறும். அதுபோல் உடலுக்கு ஒவ்வாமை

ஏற்படுத்துகின்ற உணவுகளைச் சாப்பிட்டாலும் உமிழ்நீர் அதிகம் சுரக்கும். உடலில் உமிழ்நீர் சுரப்பிகள் மூன்று உள்ளன. 1. பரோடிட் சுரப்பி 2. சப்மாண்டிபுலர் சுரப்பி 3. சப்லிங்குவல் சுரப்பி

**1. பரோடிட் சுரப்பி :**

இது காதுகளுக்குக் கீழே அமைந்துள்ளது. இதன் நாளங்கள் வழியாக கன்னங்களின் உட்புறம் இரண்டு மேல் கடவாய் பற்களுக்கு மேல் இந்த சுரப்பு நாளங்களின் துவாரங்கள் உள்ளன. இந்த நாளங்களுக்கு ஸ்டென்சன்ஸ் நாளங்கள் என்று பெயர். இந்த மனித உடலில் நீர் வறட்சி ஏற்படும்போதெல்லாம் அதிகம் சுரந்து வறட்சியைக் குறைக்கிறது.

**2. சப்மாண்டிபுலர் சுரப்பி :**

இது பரோடிட் சுரப்பிகளுக்குக் கீழே அமைந்துள்ளது. இதன் நாளங்கள் நாக்கின் அடிப் பகுதியில் துவாரங்களாக அமைந்துள்ளன.

**3. சப்லிங்குவில்சுரப்பி :**

கன்னங்களின் உள்ளே இரண்டு பக்கங்களிலும் அமைந்துள்ளன. இதன் துவாரங்கள் வாய் முழுவதும் அமைந்துள்ளன.

**உமிழ்நீரின் தன்மைகள் :**

உமிழ்நீர் காரத்தன்மை கொண்டது. இது அதிக என்ஸைம்களைக் கொண்டது. இதில் ஆண்டிபயாடிக் அதிகம் உள்ளது. இவை நோய் எதிர்ப்பு சக்தியை அதிகரிக்கின்றன. உமிழ்நீர் சாராசரியாக ஒரு மனிதனுக்கு 1500 மி.லி. அளவு சுரக்கிறது. இந்த அளவு உண்ணும் உணவின் அளவைப் பொறுத்தும் மன எண்ணத்திற்கும் ஏற்றவாறு மாறுபடுகிறது. உமிழ் நீரின் முக்கிய பணி ஜீரணமாக்குவது. **நொறுங்கத் தின்றால் நூறு வயது என்பது பழமொழி.** நொறுங்க என்பது நன்றாக மென்று என்று பொருள். உணவை நன்கு மென்று சாப்பிட்டால் நோயின்றி நூறுவயதுக்கு மேல் வாழலாம் என்று கூறுகின்றனர்.

உணவை மெல்லும்போது உமிழ்நீர் உணவுடன் நன்கு கலந்து அதில் உள்ள என்சைம்கள் உணவின்

நச்சுத்தன்மையைப் போக்கி உணவுக் குழலுக்குச் செல்ல ஏதுவாகிறது. மேலும் இதில் கலந்துள்ள நொதி பித்தத்துடன் சேர்ந்து உணவை எளிதில் சீரணிக்க உதவுகிறது.

பொதுவாகவே அஜீரணம், வாந்தி, தலைச்சுற்றல் உண்டானால் கூட உமிழ்நீர்தான் அதிகம் சுரந்து உடலை சீர்படுத்துகிறது.வாய்புண்ணை ஆற்ற உதவுவதும் உமிழ்நீர்தான். உமிழ்நீர் சுரப்பியின் அளவு குறைந்தாலும் அதிகரித்தாலும் கடினத் தன்மை அடைந்தாலும் அது நோயின் அறிகுறியாகும். சிலர் பாக்கு புகையிலை மற்றும் போதை வஸ்துக்களை உபயோகிப்பார்கள். அது உமிழ்நீருடன் சேர்த்து விஷநீராகி உடலைக் கெடுக்கிறது. மதக் கோட்பாடுகளில் விரதம் இருக்கும் காலங்களில் உமிழ்நீரை விழுங்காமல் வெளியே துப்பிவிடுவார்கள். இந்த உமிழ்நீரானது உள்ளேசென்றால் அதிகமாக பசியைத் தூண்டும் என்ற காரணத்தால் விரத காலங்களில் உமிழ்நீரை விழுங்குவதில்லை. பசியைப் போக்கும் உணவாகவும், தாகத்தைப் போக்கும் நீராகவும் உமிழ்நீர் செயல்படும். மாதக்கணக்கில் சித்தர்கள் தியானத்தில் ஈடுபடும்போது அவர்களின் பசி தாகத்தை போக்கியதும் இதே உமிழ்நீர்தான்.

உமிழ்நீர் என்பது அடுத்தவரை அவமானப்படுத்தும் நீர் அல்ல. அது நம்மை நோயின்றி காக்க சுரக்கும் அமிர்த நீராகும். பசியில்லாமல் உண்பது... உண்ணும்போது டிவி, செல்போன் பார்ப்பது... இவைகளைத் தவிர்த்து உணவின் மீது கவனம் வைத்து உண்டால் உமிழ்நீர் நன்றாகச் சுரக்கும் என்பதை அறியவும்.



**அச்சிட்டோர் : சூர்யா பிரிண்ட் சொலூசன்ஸ்**

534 -ஏ, காமராஜர் சாலை, சிவகாசி - 626123.
போன்:04562-223315 இ.மெயில் suryaprint1998@gmail.com

# ஆறாம் ஆண்டு நினைவு அஞ்சலி

## எங்களை வாழவைக்கும் தெய்வம்







**தோற்றம் :**
**23-09-1934**

**மறைவு :**
**08-05-2015**

தெய்வத்திரு. **மு. தேனம்மாள் ஆச்சி**

V. புதூர்

**(க/பெ. மு. மயி. முத்துச்சாமி செட்டியார் என்ற சேது செட்டியார்)**

**இம்மண்ணுலகை விட்டு மறைந்தாலும்**
**உங்கள் ஆசியுடன் நினைவில் வாழும்**

கணவர் : **மு. மயி. முத்துச்சாமி செட்டியார்**

மற்றும்

மகன்கள், மகள்கள், பேரன், பேத்திகள்

V. புதூர்





# வீட்டிலே தினமும் விளக்கு ஏற்றுவோம்..



பெரியவர்கள் வீட்டிலே தினமும் காலையும் மாலையும் விளக்கு ஏற்ற வேண்டும் என்று சொல்வார்கள். ஏன் தெரியுமா? இருப்பினும் சில பேர் விளக்கு ஏற்றினால் தான் வாழ்க்கை வளமாக இருக்குமா... கடவுள் வந்து விளக்கேற்ற சொன்னாரா? என்று சில பேர் விதண்டாவாதம் செய்வார்கள். சற்று யோசித்துப் பாருங்கள். இன்று நம்மில் எத்தனை பேர் வழக்கமாக விளக்கு ஏற்றும் பழக்கத்தை வைத்துக் கொண்டிருக்கிறோம்? நமது முன்னோர்கள் நாள் தவறாமல் காலையும், மாலையும் விளக்கு ஏற்றி வந்தனர்.

கட்டாயம் விளக்கேற்ற அறிவுறுத்துவதன் தத்துவம் என்ன? ஒரு சிலர் காலையில் மட்டும் விளக்கு ஏற்றுவார்கள். ஒரு சிலர் மாலையில் மட்டும் விளக்கு ஏற்றுவார்கள். இன்னும் பலர் வெள்ளிக்கிழமை மட்டும் விளக்கு ஏற்றி வைப்பார்கள். இவ்வாறு விளக்கு ஏற்றுவதற்கு அவர் அவர்களுக்கு வசதியாக இருக்கும் நேரத்தையும், சாஸ்திரத்தையும் கடைபிடிப்பார்கள். உண்மையில் காலை, மாலை இருவேளையும் விளக்கேற்ற வேண்டுமா? என்பது பற்றி தெரிந்து கொள்வோம் வாருங்கள்.

காலையில் தீபம் ஏற்றுவது என்பது நமது முன்னோர்கள் தவறாமல் செய்து வந்த ஒரு விஷயம் தான். அன்றைய காலகட்டத்தில் விவசாயத்திற்கும், மற்ற பல வேலைகளுக்கும் செல்லும் குடும்பத் தலைவர்கள் தான் இருந்தார்கள். செல்லும் காரியம் தடைகள் இன்றி நல்லபடியாக நடக்க வீட்டில் காலையில் தீபம் ஏற்றி சூரிய பகவானை வணங்கும் பழக்கம் இருந்து வந்தது.

சூரிய நமஸ்காரத்தை இரு உள்ளங்கைகளை சேர்த்து வான் நோக்கி காண்பித்து பின்னர் கைகூப்பி வணங்குவார்கள். உள்ளங்கையில் பிரபஞ்சத்தின் நல்லவற்றை கிரகிக்கும் ஆற்றல் உண்டு. இதனால் அவர்களின் உடலும், மனமும் தெளிவாக இருந்தது. சூரிய வணக்கம் உடல் ஆரோக்கியம்

தரும் என்று புரிந்து கொண்டு இருக்கிறோம். அன்று எந்த டாக்டரும் இதைச் சொல்லி நம் முன்னோர்கள் செய்யவில்லை.

சூரியன் உதயமாகும் முன்னர் ஆரஞ்சு வண்ணத்தில் மேல் எழும் சூரியக் கதிர்கள் அருணோதயம் என்று கூறுவார்கள். இந்த அருணோதய நேரத்தில் விளக்கு ஏற்றி வைத்தால் கடவுளின் ஆசீர்வாதம் முழுமையாக கிடைக்கும். உடலும், மனமும் ஆரோக்கியம் பெறும். அன்றைய நாள் முழுவதும் எதையோ சாதித்த திருப்தி உண்டாகும். இதை உணர்ந்து பார்த்தால் தெரியும். இந்த வேளையில் தீபம் ஏற்றினால் வீட்டில் மூதேவி நுழைவதை தவிர்க்க முடியும் என்று அவர்கள் நம்பினார்கள்.

தரித்திரம் ஏற்படாமல், நேர்மறை சக்திகள் வீட்டை சுற்றி இருக்கும். இதற்கு அறிவியல் காரணமும் உண்டு. அருணோதயத்தில் தான் பூக்கள், தன் இனிய இதழ்களை விரித்து அழகாய் மலரும். பூக்கள் மலர்வதை அந்த நேரத்தில் நீங்கள் காண முடியும். செடி, கொடி, மரம் என்று தாவரங்கள் அனைத்திற்கும் இந்த நேரத்தில் தான் உயிர் தன்மை அதிகமாக இருக்கும். இந்த நேரத்தில் துவங்கும் செயல்கள் எப்பொழுதும் நன்மைகளைப் பெற்றுத் தரும்.

அதேபோல் சூரியன் மறையும் நேரத்திற்கு முன்னர் வீட்டில் தீபம் ஏற்ற வேண்டும். மறையும் சூரியக் கதிர்கள் மூலமும் சில தாவரங்கள் உயிர்பெறும். ஓர் இடத்தில் அறிவியல் இருந்தால் அங்கு ஆன்மீகமும் கட்டாயம் இருக்கும். மூதேவியை விரட்டி ஆயிற்று. அடுத்து ஸ்ரீ தேவியை வீட்டிற்குள் அழைக்க வேண்டுமே!! லக்ஷ்மி தேவி வீட்டில் இருந்தால் தான் நன்மைகளும், செல்வ வளமும் இல்லத்தில் நிறைந்து இருக்கும்.

தினமும் தவறாமல் மாலை சூரியன் மறையும் நேரத்திற்கு முன்னர் தீபம் ஏற்றிவிட வேண்டும். இதனால் அஷ்ட லக்ஷ்மிகளும் வீட்டிற்குள் வருவார்கள். நமது இல்லத்தில் எப்போதும் லக்ஷ்மி கடாட்சம் இருக்கும். எண்ணங்கள் தான் வாழ்க்கை என்பதை அறிந்த நாம் நம்பிக்கையுடன் கூடிய பிரார்த்தனைகள் எந்த நேரத்தில் செய்தாலும் பலிக்கும்.

ஆனாலும் சூரிய பகவானின் உதயமும் அஸ்தமனமும் நம் பிரார்த்தனைகளை பரிபூரணமாக ஏற்கும் ஆற்றல் கொண்டது.

எவ்வளவு பணிகள் நமக்கு இருந்தாலும் பரவாயில்லை. அதற்கு இடையில் ஒரு நிமிடம் நம்மால் நேரம் ஒதுக்க முடியாதா? தீபம் ஏற்றுவதற்கு முக்கிய காரணம் குடும்பம் அமைதியாக, சுபீட்சமாக இருக்கத் தானே? இன்று பலருக்கும் நிம்மதி இல்லாமல் போனதற்கு காரணம் மன அழுத்தம். தினமும் 2 நிமிடம் காலையும் மாலையும் தீபம் ஏற்றுவதால் மனம் இறுக்கத்திலிருந்து விடுபட்டு தெளிவு பெறும். தொட்டதெல்லாம் துலங்கும். 1 நிமிடம் கண்களை மூடி வேண்டிக் கொள்ளுங்கள். இந்த நேரத்தில் வேண்டும் வேண்டுதல் அப்படியே பலிக்கும். சகல செல்வங்களும் பெறுவதுடன் மோட்சமும் கிட்டும் என்பதில் சந்தேகமில்லை.

முன்னோர்கள்செய்து வந்த விளக்கேற்றும் பழக்கத்தை இன்றும் நாமும் தொடர்ந்து செய்து வந்தால் அதை அடுத்து வரும் தலைமுறையினரும், தானாக செய்வார்கள். அப்பொழுது இல்லத்தில் மகிழ்ச்சியும், உள்ளத்தில் மகிழ்வும் ஏற்படும்.

**- திருமதி. ஆனந்த செல்வம். நங்கநல்லூர்.**

# சிவபாதம் சேர்ந்தார்கள்

வருமுறைப் பிறவி வெள்ளம், வரம்பு காணாது அழுந்தி
உரு எனும் துயரக் கூட்டில், உணர்வின்றி மயங்குவார்கள்
ஒரு மனதுடன் சேவித்து, முன்செலும் சிறப்பினாலே
மருவிய பிறவி நீங்க, மன்னு சிவசோதியில் புகுந்தார். - திருமுறை

**தங்களது உறவுகளை இழந்து தவிக்கும் குடும்பத்தினருக்கு ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறோம். - குரல் நிர்வாகம்**



ஆலவயல் திரு. ராமன் செட்டியார்-சீதா ஆச்சி இவர்களது புதல்வி திருமதி. அங்கம்மாள் ஆச்சி அவர்கள் 17-05-2021 அன்று இறைவனடி சேர்ந்தார்கள். - தகவல்: வாட்ஸ்அப் செய்தி



பொன்னமராவதி திருமதி. வேதநாயகி ஆச்சி அவர்களின் தகப்பனார் சமையல் மாஸ்டர். திரு. சொ.சிதம்பரம் செட்டியார் அவர்கள் 15-06-2021 அன்று இறைவனடி சேர்ந்தார்கள்.
தகவல்: திரு வேலவன், பொன்னமராவதி



சிங்கம்புணரி தெய்வத்திரு. மகாலிங்கம் செட்டியார் அவர்களின் மகன் திரு. M. பிரகதீஸ் செட்டியார் அவர்கள் 04-06-2021 அன்று இறைவனடி சேர்ந்தார்கள். - தகவல்: வாட்ஸ்அப் செய்தி



கோவை-வடவள்ளி, திரு. அரு.மா. அருணாசலம் செட்டியார், அவர்கள் 16-07-2021 அன்று இறைவனடி சேர்ந்தார்கள்.
- தகவல்: திரு M.சேதுராமன், மணப்பாறை.

சொக்கம்பட்டி திரு. தருமலிங்கம் செட்டியார் அவர்களின் மனைவி திருமதி. ராஜேஸ்வரி ஆச்சி 20-06-2021 அன்று இறைவனடி சேர்ந்தார்கள். தகவல் : வாட்ஸ்அப் செய்தி.



திருபுவனம் திரு. N.N. சாமி, அவர்கள் (தமிழ்நாடு ஸ்டேட் டிரேன்ஸ்போர்ட் கார்பரேசன், கும்பகோணம்) 16-06-2021 அன்று இறைவனடி சேர்ந்தார்கள்.

- தகவல் : வாட்ஸ்அப் செய்தி



சிங்கம்புணரியைச் சேர்ந்த திருமதி திரவியம் ஆச்சி அவர்கள் 25-06-2021 அன்று இறைவனடி சேர்ந்தார்கள். - தகவல்: வாட்ஸ்அப் செய்தி



கோவை பேரூர் போஸ்டல் காலனியில் உள்ள தேனிமலை நாகப்பன் செட்டியார் அவர்களின் தாயார் திருமதி தேனம்மாள் ஆச்சி அவர்கள் 31-05-2021 அன்று இறைவனடி சேர்ந்தார்கள்.

- தகவல்: வாட்ஸ்அப் செய்தி



பொன்னமராவதி திரு M. திருஞானம் செட்டியார்-மாலதி ஆச்சி இவர்களது மகன் ஹரிகுமார் 03-07-2021 அன்று இறைவனடி சேர்ந்தார்கள்.

- தகவல்: வாட்ஸ்அப் செய்தி

## பிறப்பும்... இறப்பும்...

ஜனனும் பூமியில் புதியது இல்லை
மரணத்தைப் போலொரு பழையதும் இல்லை
இரண்டு இல்லாவிடில் இயற்கையும் இல்லை
இயற்கையின் ஆணைதான் ஞானத்தின் எல்லை.

கண்ணில் தெரிந்தது காற்றுடன் போக
மண்ணில் பிறந்தது மண்ணுடன் சேர்க.
எலும்பு சதை கொண்ட உருவங்கள் போக..
எச்சங்களால் அந்த இன்னுயிர் வாழ்க.

# சினம் கொள்ளாமை

**ஜென்** பிரிவில் அடிக்கடி கூறப்படும் ஒரு போதனை காலியான படகு பற்றிய ஒரு சம்பவம். பெரிய ஜீவ நதியில் நீங்கள் பயணப்பட்டுக் கொண்டிருக்கும்போது திடீரென காலியான படகு ஒன்று உங்கள் படகின் மீது மோதி விடுகிறது என வைத்துக் கொள்வோம். நீங்கள் என்ன செய்வீர்கள். கோபப்படமாட்டீர்கள். ஆனால் அதிலேயே படகோட்டி ஒருவன் இருந்தால் அவன் மீது எவ்வளவு கோபம் வரும்.

அதே போலத்தான் உங்கள் வாழ்வில் நடைபெறக் கூடிய நிகழச்சிகளும் உங்களை உங்கள் அண்டை அயலார் சரியாகப் புரிந்து கொள்ளாமல் இருந்திருக்கலாம். மற்றும் நண்பர்கள் உங்களைச் சீண்டி விளையாடி இருக்கலாம். நேற்று உங்களின் மீது அபாண்டமான பழியை உங்களின் அலுவலக சகா சுமத்தி இருக்கலாம். இவர்கள் அனைவரும் காலியான படகு மாதிரி தான்... அவர்கள் தங்களது செய்கைகளை ஏதோ ஒரு உந்துதல் பேரில் தான் செய்திருக்கிறார்கள். தாங்கள் என்ன செய்கிறோம் என்பதே அவர்களுக்குத் தெரியாது.

கண்ணுக்குத் தெரியாத ஒரு சக்தியினால் காலியான படகு உங்கள் படகின் மீது மோதுவது போல தங்கள் வலியினாலும் காயத்தினாலும் உங்கள் மீது அவர்கள் மோதுகிறார்கள். இதை உணரும் வரை நாம் நமது துக்கம், இறந்த காலம் ஆகியவற்றின் கைதிகளாக இருப்போம். நிகழ் காலத்தின் சக்திகளுக்குக் கட்டுப்பட்டு எப்போதும் பாய்ந்து பெருகும் அன்பை உள்ளத்தில் ஏற்றுக்கொண்டால் யார் மீதும் கோபம் கொள்ள மாட்டோம் என்பது உண்மை. எனவே காலிப் படகு போன்றவற்றை தவிர்த்து வந்தால், உங்களுக்கு பெருமையே அன்றி, சிறுமை இல்லை.

**- சுப. ராஜகோபால். சென்னை -61**

